ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## மணவாளமாமுனிகளின் அறுநூறாண்டு நிறைவு மஹோத்ஸவத்தை முன்னிட்டு

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர் ஸ்வாமியெழுதிய

# மணவாளமாமுனிகள் வைபவம்



ஸ்ரீமான் உ. வே. பரமார்த்த ஸார்வபௌம சிக்வேதி

B. வரதாசாரியார் ஸ்வாமிகளால்

அச்சிட்டு வெளியிடப்பட்டது.

ஸாதாரண ௵ ஐப்பசித் திருமூலநன்னாள்

3—11—1971.

பேருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.







ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

மணவாளமாமுனிகளின் அறுநூருண்டு கொண்டாட்ட
நினைவு மலர்களில்

பன்னிரண்டாவது மலரான

# ஸாதாரணத் திருமூலமலர்

## மணவாளமாமுனிகளின் வைபவமும்
## ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்த விசேஷங்களும்

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் புரிந்த தொண்டு.

K. P. சந்தரகாசன்,
ஈரோடு.

ஸாதாரணவருஷ ஐப்பசித் திருமூலநன்னுள்.
3—11—1970

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்







ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# மணவாளமாமுனிகளின் அறுநூறாண்டு நிறைவு நினைவு மலராக

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய

# ஸ்ரீஜகதப்யுதயைகமூலத் திருமூலமலர்

---

காப்பு

... வணங்கும் வேதியர்
... சிமேற் சேர்கவே.

## முன்னுரை

"வணங்கும் துறைகள் பலபலவாக்கி மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பலபலவாக்கி" என்பது நம்மாழ்வாரருளிச் செயல். அதன்படி உலகில் பல்வேறு சமயங்கள் தோன்றிநிற்கக் காணாநின்றோம். ஸகல மதங்களினுள்ளும் ஸ்ரீவைஷ்ணவ மதம் மிகச் சிறந்ததென்று மெய்யடியார்களின் கொள்கை. அந்த ஸ்ரீவைஷ்ணவ மதத்தினுள் பல உட்பிரிவினைகள் இருந்தாலும் அவை எல்லாம் ஆழ்வாருடையவும் எம்பெருமானாருடையவும் ஸ்ரீஸூக்திகளையே நிதியாகக் கொண்டிருக்கவேண்டியவைகளாதலால் அவற்றுள் பரஸ்பரம் இகழ்ச்சிகாட்டுவது உற்றதன்று.

அவரவர்கள் தங்கள் தங்கள் ஸம்பிரதாயங்களில் அன்பும் ஆதரவும் கொண்டிருப்பது ப்ராப்தமேயாகும். சில ஸமயங்களில் பிற மதங்களை நிந்திக்க நேர்ந்தாலுங்கூட, நஹி நிந்தா ந்யாயத்தையே பெரியார்கள் கருதுவர்கள். அந்த ந்யாயத்தின் கருத்தாவது—ஒரு விஷயத்தில் நிந்தை ஏற்பட்டாலும் அங்கு நிந்தையில் நோக்கென்பதில்லை; உத்தேச்யமான மற்றொன்றின் உயர்த்தியைக் கூறுவதிலேயே நோக்காகும் என்பதாம். இதற்கு உதாஹரணமாக ஒன்று காட்டுவோம்; ஆசாரியர்

பெரியாழ்வாருடைய ஸ்ரீஸூக்திக்கு வியாக்கியானம் செய்தருளப் புகுமிடத்து அவ்வாழ்வாரைப் போரப் பொலியப் புகழ்ந்து பேசுவதோடு நில்லாமல் மற்றை யாழ்வார்களைக் குறைத்துப் பேசுவதையும் காணுகின்றோம் இதனால் அவர்களை நிந்திப்பதாக ஆகாது. ப்ரக்ருதத்தில் உத்தேச்யரான வொருவருடைய புகழ்ச்சியிலேயே அது விச்ராந்தமாகும். இதுவே நஹிநிந்தா ந்யாயத்தின் கொள்கை.

தம்முடைய ஸம்பிரதாயத்தின் மேன்மையையும் தத்துவங்களையும் விளங்கக் காட்ட நினைப்பவர்கள் இதர ஸம்பிரதாயங்களைப்பற்றின இகழ்ச்சியுரையை அணுவளவும் நெஞ்சிலும் நினைக்கக் கூடாது.

ஸ்ரீ வைஷ்ணவாசார்யர்களின் ஸம்ப்ரதாயத்திற்கே தென்னாசார்ய ஸம்ப்ரதாயமென்று பெயர். ச்ருதிகள் பஞ்சராத்ர ஸம்ஹிதைகள் ஸ்ம்ருதிகள் இதிஹாஸ புராணங்கள் ஆழ்வாரருளிச் செயல்கள் என்று பலவகைப்பட்ட ப்ரமாணங்களுள் ஆழ்வாரருளிச் செயல்களான திவ்யப் பிரபந்தங்களுக்கே அதிசயித்த ப்ராமாண்யமுள்ளதென்று கொள்பவர்களே ஸ்ரீ வைஷ்ணவர்க ளென்பார். அன்னவர்களையே இக்காரணம்பற்றியே தென்னாசார்யர்களென்பது. தென்கலையாகிய தமிழ் வேதத்தில் ஊற்றமுள்ள ஆசார்யர்கள் தென்னாசார்யர்க ளென்றபடி. இவர்களுடைய ஸம்பிரதாயம் ஆழ்வார்களாலும் ஸ்ரீமந் நாதமுனிகள்தொடங்கி மணவாளமாமுனிகளீறாகவுள்ள ஆசாரியர்களாலும் சேமிக்கப்பட்டதாகும். விசேஷித்துப் பிள்ளை லோகாசார்யரும் மணவாள மாமுனிகளும் இந்த ஸம்பிரதாயத்திற்கு விஜயத்வஜம் போன்றவர்கள். இவ்விரண்டு திருநாமங்களும் திருவவதாரம் செய்தருளாதிருந்தால் இவ்வுலகம் இருள்மயமாகவே யிருந்திருக்கும்.

ஆசாரியர்கள்—(1) அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர்கள் என்றும் (2) க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர்க ளென்றும் பொதுவாக இருவகைப்படுவர்கள். சிஷ்யர்கள் பலகால் துவண்டு வேண்ட அதனாலே அநுக்ரஹிப்பவர்கள் அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர்களாவர். சிஷ்ய ப்ரார்த்தனையைச் சிறிதும் எதிர்பாராமல் தம்முடைய இயற்கையின்னருளால் தாமாகக் கனிந்து "பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான்'' என்ற கணக்கிலே தம்பேறாக அநுக்ரஹித்தருள்பவர்கள் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர்கள். நமது ஆசார்ய கோஷ்டியில் ஸ்ரீராமாநுஜர் ஒருவரே க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர் என்ற பட்டத்தை முதன்மையாகப் பெற்றவராயிருந்தும் அவர் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்த விவரணமாக ஒரு க்ரந்தமும் அருளிச்செய்தாரல்லர். ப்ரஹ்மஸூத்ரங்களின் அர்த்தங்களை விவரிக்க மூன்று நூல்களை அருளிச்செய்தவர் ரஹஸ்யார்த்த விவரணமாக ஒரு சிறுநூலாவது அருளிச்செய்திருக்கலாம்; இன்னுமொரு திருக்கோலம் பூண்டு [அதாவது—மணவாள மாமுனிகளாக அவதரித்து] அப்போது அருளிச்செய்ய

வேணுமென்று திருவுள்ளம்பற்றி யிருந்தமையாலே ஸ்ரீ ராமானுஜஜ்ஞான அந்த அவதாரந்தன்னிலே ரஹஸ்யார்த்தங்களை ஏடுபடுத்தாமே சென்றனர். ஸ்ரீ பாஷ்யம் கீதாபாஷ்யம் முதலிய திவ்ய க்ரந்தங்களில் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்தங்களும் ஆங்காங்குச் சேமிக்கப்பட்டே யிருக்கின்றனவாகிலும் அவற்றைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டித் தாராத குறை குறையே; அக்குறைதீர ஸர்வஜ்ஞ ஸார்வ பௌமரான பிள்ளைலோகாசார்யர் முதன் முதலாக ஸ்ரீ வைஷ்ணவ மண்டலிக்கு மஹோபகாரம் செய்தருளினார். லோகாசார்யரென்கிற திருநாமம் இவர்க்கே தகும். இவ்விருள் தருமா ஞாலத்தின் அகவிருளை அறவேயொழிக்கவல்ல திவ்ய ஸ்ரீஸூக்திகளைத் தேனும் பாலும் நெய்யுங் கன்னலுமமுதுமாக அளித்தருளினவர் இம்மஹாசார்யர். இவருடைய ஸர்வஜ்ஞத்வத்தைப் புகழ்வதா? பரமகாருணிகத்வத்தைப் புகழ்வதா? பரம ப்ராமாணிகத்வத்தைப் புகழ்வதா? என்றால் ஒவ்வொன்றும் நெஞ்சால் நினைப்பரிதே. ஒரு அர்த்தத்திலும் ஆக்ரஹமின்றிக்கே ஆசார்யபரம்பரா ப்ராப்தமான அர்த்தங்களையே அழகுபட அமைத் திருக்குமழகு இவருடைய க்ரந்தங்களுக்கே அஸாதாரணச் செல்வமா யிருக்கும். இவர் அருளிச்செய்த நூல்கள் 'அஷ்டாதச ரஹஸ்யம்' என்று ஸுப்ரஸித்தமாயிருக்கும். அந்தப் பதினெட்டு ரஹஸ்ய க்ரந்தங் களுள் ஸ்ரீவசநபூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி என்ற மூன்று ரஹஸ்யநூல்கள் மிகச் சிறந்து முக்கியமாக விளங்கும். இவருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிச் செய்த ஆசார்ய ஹ்ருதயமென்னும் ரஹஸ்யமுஞ் சேர்ந்து நான்கு ரஹஸ்ய க்ரந்தங்கள் தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்திற்கு மூலாதாரமாக விளங்குகின்றன.

இந்த நான்கு க்ரந்தங்களுக்கும் மிகச்சிறந்த வியாக்கியானத்தை அருளிச்செய்தவர் மணவாளமாமுனிகள். இவர்க்கு "விசதவாக் சிகாமணி" என்றொரு பிருதம் வழங்கிவருகின்றது. இதனை முதல் முதலாக அளித்த மஹாநுபாவர் ஆரோ அறிகின்றிலோம். மருமமறிந்து அளித்த அந்த விருது இவ்வாசார்ய சிகாமணி யொருவர்க்கேதான் ஏற்குமென்னத் தட்டில்லை.

நீர்பூத்த நெருப்பு என்னநின்ற இவ்வாசிரியரின் திருவாக்குப் போல் இவ்வுலகில் இதுகாறும் கண்டதில்லை யென்றால் இனிமேலா காணப்போகிறோம்? மாமுனிகளின் திவ்யமங்கள விக்ரஹமும் திருவுள் ளமும் ஸத்வகுணமொன்றே வடிவெடுத்ததா யிருந்ததென்பது அவரு டைய திருவாக்குக்களில் அக்ஷரந்தோறும் புலப்படாநின்றது. ஸகல சாஸ்த்ர ஸாரார்த்தங்களையும் வெகு அழகாகத் திருவுள்ளத்திலே அடக்கிக்கொண்டு நாட்பூ அலர்ந்தாற்போலே ஸ்ரீ ஸூக்திகளை ஏற்றக் குறைவின்றி அமைத்திருக்கிற அழகு என்னே! என்னே!! என்று உள்ளம் குழைகின்றதத்தனை. விமர்ச சக்தி, நிருபண நைபுண்யம்

என்றிங்ஙனே சொல்லும்படியான திறமையெல்லாம் மிக வியக்கும்படியான முறையில் மணவாள மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளிலேதான் அமைந்துள்ளது

பல சொல்லி என்? ஸாரமாக வொன்று சொல்லித் தலைக்கட்டுகின்றேன். "அப்தீர் லங்கித ஏவ வாநரபடை: கிந்த்வஸ்ய கம்பீரதாம் ஆபாதாள நிமக்நபீவரதநுர் ஜாநாதி மந்தராசல:" என்று முராரி என்கிற ஒரு மஹாகவி சொல்லுகிறார். வானரவீரர்கள் கடலைக்கடந்து அப்பால் சென்றுவிட்டார்களெனினும் கடலின் ஆழத்தை அவர்கள் சிறிதும் அறியகில்லார்கள்; கடலினுள்ளே பாதாளம் வரையில் அமிழ்ந்துகிடந்த மந்தரமலைக்கன்றோ அந்த ஆழம் தெரியும்—என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. ஜ்ஞாதாக்களென்று பேர்படைத்த மற்றவர்களெல்லாரும் வானர முதலிகளின் ஸ்தானத்திலேயாய் மணவாளமாமுனிகளொருவரே மந்தர மலையின் ஸ்தானத்திலே எண்ணக்கூடியவராக உள்ளார். ஆசார்யர் என்கிற சொல்லுக்கு மாமுனிகளொருவரே இலக்காமவர் என்றும், ஸூக்தி, ஸ்ரீ ஸூக்தி, திவ்ய ஸூக்தி, திவ்ய ஸ்ரீ ஸூக்தி என்றிங்ஙனே சொல்லும் சொற்களெல்லாம் மாமுனிகளின் திருவாக்கையேதான் இலக்காகக் கொள்ளத்தக்கவை யென்றும் நிஷ்பக்ஷபாதர்களின் ஸித்தாந்தம்.

இப்பரமாசார்யருடைய திவ்ய ஸூக்திகளில் நாமறியவேண்டிய ஸகலார்த்தங்களும் தெள்ளமுதெனக் கிடக்கின்றன கடலில் நவமணிகளும் உள்ளனவெனினும் விரகர் எடுத்துக் கொடுத்தாலன்றி அநுபவிக்க இயலாதவாறு போல, இவ்வர்த்த விசேஷங்களையும் எடுத்துக்காட்டியே அநுபவிப்பிக்கவேண்டியிருத்தலால், தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தின் அரியபெரிய ஆழ்பொருள்களை எளிதிலுணர விரும்புவார்க்குப் பரங்கான விஷயங்களுடன் இம்மலர் வெளியிடப்படுகின்றது.

உயர்ந்த க்ரந்தங்களிலே காலக்ஷேபம் பண்ணிப் பலகால் பெரியார்களிடம் கேட்டுக் கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டிய நற்பொருள்களை எளிதிலுணர உபாயமுண்டா? என்று கேட்குங்காலமிது. லௌகிக உத்தியோகங்கள் வியாபாரங்கள் முதலானவற்றில் ஈடுபட்டிருந்தும் ஆஸ்திக்யம் குன்றாமலிருந்து இப்படிப்பட்ட நல்விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேணுமென்னும் ருசியுடையார் பலர் இருப்பதால் அன்னவர்களின் கோரிக்கைக்கு இணங்கியும் இம்மலர் வெளியிடப்படுகின்றது.

மணவாள மாமுனிகளின் திவ்ய சரித்திரம் முன்னாக ஸகலார்த்த விசேஷங்களும் அடைவே இதில் வெளியிடப்படுகின்றன. ... *

முகவுரை முற்றிற்று.

ஸ்ரீ:

# மணவாள மாமுனிகள் வைபவம்

---

"மன்னுயிர்காளிங்கே மணவாளமாமுனிவன்
பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளை—உன்னிச்
சிரத்தாலே தீண்டில் அமானவனும் நம்மைக்
கரத்தாலே தீண்டல் கடன்"

— ப்ரவேசம் —

உபயவிபூதி நாதனான எம்பெருமானுடைய லீலா விபூதியாகிய இவ்வுலகம் ஞானிகளால் இருள் தருமா ஞாலமெனப்பட்டது. இருளைப் போக்குதற்குரிய அக்நி ஸூர்யன் சந்திரன் முதலிய தேஜஸ் பதார்த்தங்கள் பலபல இருந்தும் அவற்றால் போக்கவொண்ணாத அஜ்ஞாநாந்தகாரமே இங்கு இருள் என்னப்பட்டது. அத்தகைய இருளைப் போக்குவதற்கு "புண்யாம்போஜ விகாஸாய பாபத்வாந்த க்ஷயாய ச, ஸ்ரீமாந் ஆவிரபூத் பூமௌ ராமாநுஜ திவாகர:" என்றபடி எம்பெருமானாராகிற விலக்ஷண ஸூர்யன் இவ்வுலகில் திருவவதரித்து "கடலளவாய திசையெட்டினுள்ளும் கலியிருளே, மிடைதரு காலத்திராமானுசன்—மிக்க நான்மறையின் சுடரொளியால் அவ்விருளைத் துரந்திலனேல் உயிரையுடையவன் நாரணனென்று அறிவாரில்லை யுற்றுணர்ந்தே" என்ற அமுதனாருளிச்செயலின்படியே மஹோபகாரம் செய்தருளும்படியாயிற்று. "தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன், சொற்கற்ற சோம்பரும் சூனிய வாதரும், நான்மறையும் நிற்கக் குறும்புசெய் நீசரும் மாண்டனர் நீணிலத்தே. பொற்கற்பகம் எம்மிராமானுசமுனி போந்த பின்னே" என்கிறபடியே ஸம்ஸ்க்ருத வேத பாஹ்ய குத்ருஷ்டிகளையெல்லாம் தம் ஸூக்தி சரங்களாலே நிரஸித்தருளி, "வான்திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல் ஆன்ற தமிழ் மறைகளாயிரமும், ஈன்ற முதல் தாய் சடகோபன். மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்" என்னும்படியாக ஆழ்வார்களின் அருளிச்செயல்களையும் ப்ரவர்த்திப்பித்தருளி, திவ்யதேசங்களையும் உத்தரிப்பித்து ஒருவாறு அவதார க்ருத்யத்தைத் தலைக்கட்டிக்கொண்டு சுடரொளிச் சோதிக்கு எழுந்தருளினபின், சிலகாலம் கடந்தபிறகு, அவ்வவதாரத்தில் சிதைந்

தொழிந்த ஸம்ஸ்க்ருத வேத பாஷ்யகுத்ருஷ்டிகள் தாமே மீண்டும் த்ராவிட வேத பாஷ்ய குத்ருஷ்டிகளாக ஜனித்து இவ்வுலகை நலிய, அந்த எம்பெருமானார் தாமே மீண்டும் வைகுந்தநாதனுடைய திருவாணையினால் இந்நிலவுலகில் திருவவதரித்து மணவாள மாமுனிகளென்கிற திருநாமத்துடனே விளங்கி, முன்னவதாரத்திற் செய்தருளின மஹோபகாரங்களிற் காட்டிலும் பன்மடங்கு அதிசயித்த சேமங்களைச் செய்தருளி இவ்விருள்தருமா ஞாலத்தைத் தெருள் தருமா ஞாலமாகத் திருத்திப் பணிகொண்டார். அவ்வாசார்ய சிகாமணியின் எண்ணில் பல் குணங்களைக் கூறுதற்கு அவர் தம்முடைய நிஜரூபமான ஆதிசேஷனும் அசக்தன் என்கிறவிது அதிசயோக்தியன்று.

'பூர்வாசார்யர்' என்று இற்றைக்கும் நாம் வழங்கி வருமாறு பலபல மஹாசார்யர்களின் திருவவதாரத்தினால் புனிதமாய இவ்வுலகில், அவ்வாசாரிய பரம்பரை மணவாள மாமுனிகளோடு முடிவு பெற்றிருக்கின்றது. மாமுனிகளுக்குப் பிறகும் பல பல மஹான்கள் திருவவதரித்தாலும் 'பூர்வாசார்யர்கள்' என்கிற வ்யபதேசம் மாமுனிகளளவிலே விச்ராந்தமாயிருக்குமத்தனை. *மதுரேண ஸமாபயேத்* என்பது நியாயமாதலால் மாதுர்யமே வடிவெடுத்த மாமுனிகளோடு பூர்வாசார்ய பரம்பரையை எம்பெருமான் ஸமாபநம் செய்தது மிகப் பொருந்தும். மதுரம் என்கிற வடசொல்லானது, 'மகாரத்தை முன்னே யுடையது' என்னும் பொருளையுமுடைத்தாதலால் மகாராதியான திருநாமமணிந்த மணவாள மாமுனிகளோடே ஸமாபநம் செய்தருளின பகவான் ஸுஸமர்த்தனே.

எம்பெருமான் லோக ஸம்ரக்ஷணார்த்தமாகச் செய்தருளின விபவாவதாரங்களுள் இராமபிரானாகத் திருவவதரித்த காலத்தில் பல பேர்களிடத்திலே தான் பணிவுகாட்டிப் போந்தான். விச்வாமித்ர முனிவன், ஸுக்ரீவ மஹாராஜர், ஸமுத்ரராஜன் என்றிப்படிப் பல வ்யக்திகள் பக்கலிலே வணங்கிநின்றான். முதலில் விச்வாமித்ருடைய சரித்திரங்களை யுணராமல் 'இவர் ஒரு மஹர்ஷி' என்கிற ப்ரதிபத்தி மாத்திரமேகொண்டு *இமௌ ஸ்ம முநிசார்தூல! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ, ஆஜ்ஞாபய யதேஷ்டம்* என்று அவர்க்குச் சேவகனாய் நின்றான். பிறகு அஹல்யா சாபவிமோசனம் செய்தபின் சதாநந்தர் வாயிலாக அம்முனிவருடைய சரிதைகளை விரிவாகக் கேட்டபின் இங்ஙனே ராஜஸரும் தாமஸருமான இவரையோ நாம் ஆசார்யனாகக் கொள்ளப்பெற்றது! என்று திருவுள்ளாக் குறையுற்றிருந்தான் போலும்.

பிறகு ஒருகால் * ஸுக்ரீவம் சரணம் கத: * என்னும்படியாக ஒரு குரக்கினத்தரசன் காலிலே விழும்படியாயிற்று. அவன் திறத்துப் ப்ரீதியும் நிலைநின்றிருந்ததில்லை; இளையோனை யனுப்பி *மா வாலிபத மந்வகா:* இத்யாதிகளாலே நிக்ரஹ ப்ரகாசனம் செய்யவேண்டியதாயிற்று. பிறகு * ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்து மர்ஹதி * என்ற விபீஷண வசனத்தின்படியே கடலரசன்பாடே சரணம் புகுந்து கிடந்தான். அங்கும் அப்ரீதியோடே தலைக்கட்டிற்று; கோபமாஹாரயத் தீவ்ரம் —ஸாகரம் சோஷயிஷ்யாமி* இத்யாதிகள் காண்க

பிறகு க்ருஷ்ணவதாரத்தில் ஸாந்தீபநி பக்கலிலே சரணம் புகுந்து வித்யாக்ரஹணம் பண்ணினன்; அங்கு குருதக்ஷிணை ஸமர்ப்பிக்க விரும்பி 'என்ன அபேக்ஷிதம்?' என்று அவரைக் கேட்டபோது *ஒது வாய்மையும் உவனியப்பிறப்பும் உனக்கு முன்தந்த வந்தணனொருவன், காதலென்மகன் புகலிடங் காணேன் கண்டு நீ தருவாய் எனக்கென்று கோதில் வாய்மையினன் உனை வேண்டிய குறை முடித்து அவன் சிறுவனைக் கொடுத்தாய்* என்னும்படியாக அந்த ஸாந்தீபதி என்றைக்கோ மறிகடல்வாய் மாண்டுபோன தன் புதல்வனைக் கொணர்ந்து கொடுக்குமாறு வேண்டினர். இங்ஙனம் லௌகிகமான பலனை விரும்புகின்ற இவரை ஆசாரியனாகக் கொள்ளப்பெற்றோமே! யென்று அவரிடத்திலும் எம்பிரானது நெஞ்சம் அப்ரீதிகொண்டிருந்தது போலும்.

ஆக; விபவாவதாரங்களில் தான் தலைமடுத்த விடமெல்லாம் தடுமாறிப் போகவே, பெருங்குறைவாளனான பகவான் அர்ச்சாவதாரத்திலாவது குறைதீர ஒரு ஸதாசார்ய ஸமாச்ரயணம் பெற்று வாழ்வோமென விரும்பி, *மாமுனி வேள்வியைக் காத்து அவபிரதமாட்டிய வடுதிறலயோத்தியெம்மரசாயும் * கோவலனாய் வெண்ணெ யுண்டவாயனாயுமுள்ள அழகிய மணவாளனான திருக்கோலத்தில், ஆசார்யத்வபூர்த்தியுள்ள மணவாள மாமுனிகள் பக்கலிலே சிஷ்யவ்ருத்தியை வஹித்து க்ருதார்த்தனானன். இத்தகைய ஒப்புயர்வற்ற பெருமை வாய்ந்த மாமுனிகளின் வைபவம் ஸ்ரீ வைஷ்ணவ உலகுக்கெல்லாம் ஜீவாதுவாகையாலே ஸாரஸம்க்ஷேபமாக இங்கு விஜ்ஞாபிக்கப்படுகிறது.

ப்ரவேசம் முற்றிற்று.

## ஸ்வாமியின் திருவவதாரம்

எம்பெருமானாருடைய திருவடிகளில் நூற்றுக்கணக்கான முதலிகள் ஆச்ரயித்திருந்தாலும் நம்முடைய ஓரான் வழியான குருபரம்பரையிலே எம்பெருமானார்க்கு அடுத்தபடியாக எம்பார் ஆசார்ய பதம் வஹித்தார். அவருடைய சிஷ்யர் (கூரத்தாழ்வான் திருக்குமாரரான) ஸ்ரீபராசரபட்டர். அவருடைய சிஷ்யர் நஞ்ஜீயர். அவருடைய சிஷ்யர் நம்பிள்ளை. அவருடைய சிஷ்யர் வடக்குத் திருவீதிப்பிள்ளை. அவருடைய சிஷ்யர் பிள்ளைலோகாசாரியர். அவருடைய சிஷ்யர் திருவாய்மொழிப்பிள்ளை. அவருடைய சிஷ்யர் மணவாள மாமுனிகள்—என்றிப்படி நம்முடைய குருபரம்பரையின் அடைவு உள்ளது.

தொல்லை வாதியர்களின் வாழ்வு அறவும் மறையவர் தம் தாழ்வு அறவும், தாரணி தவர் பெறவும், தத்துவ நூல்கள் கூறுறவும் இந்நிலவுலகத்திலே திருவைதிகநகரத் திருவுள்ளம் பற்றிய திருவனந்தாழ்வான் நல்லார் நவில் குருகூர் என்கிற ஆழ்வார் திருநகரியில் திருநாவீறுடைய பிரான் தாதரண்ணர் [illegible] என்கிற கணக்கிலே தந்தையாக வுகந்து அவருடைய திருக்குமாரராய் (கலியுகாதி நாலாயிரத்து நானூற்றெழுபத்திரண்டாவதான) ஸாதாரண வருடத்தில் ஐப்பசி மாதத்தில் திருமூல நக்ஷத்திரத்தில் அந்தத் திருநகரியில் திருவவதரித்தருளினான். அந்த நன்னாளின் சிறப்பை

"செந்தமிழ் வேதியர் சிந்தை தெளிந்து சிறந்து மகிழ்ந்திடுநாள்
சீருலகாரியர் செய்தருள் நற்கலை தேசு பொலிந்திடுநாள்
மந்தமதிப் புவி மானிடர் தங்களை வானில் உயர்த்திடுநாள்
மாசறு ஞானியர் சேர் எதிராசர் தம் வாழ்வு முளைத்திடுநாள்
கந்தமலர்ப் பொழில் சூழ் குருகாதிபன் கலைகள் விளங்கிடுநாள்
காரமர் மேனி அரங்க நகர்க்கிறை கண்கள் களித்திடுநாள்
அந்தமில் சீர் மணவாள முனிப்பரன் அவதாரம் செயுநாள்
அழகு திகழ்ந்திடும் ஐப்பசியில் திருமூலம் அதெனு நாளே"

என்று பாசுரமாகவும்,

"யந்மூலமாச்வயுஜமாஸி யதவதார மூலம்"

இத்யாதி ச்லோகங்களாகவும் பின்புள்ள முதலிகள் அநுஸந்தித்தார்கள்.

இங்ஙனே உலகுக்கெல்லாம் ஓருயிராகத் திருவவதரித்தருளின திவ்யமூர்த்திக்கு ஸ்ரீரங்கநாதனுடைய திருநாமத்தைச் சாத்த விரும்பிய பெரியார் 'அழகிய மணவாளன்' என்று திருப்பெயரிட்டனர். அழகிய மணவாள நாயனார் என்று சிறப்புத்திருநாமமாக வழங்கி வந்தது.

அந்நப்ராசந சௌளோபநயநாதிகளான வர்ணோசித ஸம்ஸ்காரங்களும் அவை வே நடைபெற்றன.

## வித்யாப்யாஸம்

*துக்தோதந்வத் நவ மதுரம் சுத்த ஸத்வைகரூபம் ரூபம் யஸ்ய ஸ்புடயதித்ராம் யம் பணீந்த்ராவதாரம்* (வரவரமுநிசதகம்) என்கிறபடியே ஸாக்ஷாத் திருவனந்தாழ்வானுடைய திருவவதாரமாகிய இவர் *ப்ரக்ருஷ்ட விஜ்ஞாந பலைகதாமநி* என்று ஆளவந்தாரருளிச்செய்தபடியே ஞானக் கடலாயிருக்கச்செய்தேயும், ஸ்ரீராமக்ருஷ்ணாதிகளும் வஸிஷ்ட விச்வாமித்ர ஸாந்தீபநிப்ரப்ருதிகள் பக்கலிலே வித்யைகளை அதிகரித்தவாறுக லௌகிகப்ரக்ரியைக்கு இணங்க வேதங்களையும் வேதாங்கங்களையும் மற்றுமுள்ள ஸகல சாஸ்த்ரங்களையும் திருத்தகப்பனார் முதலானார் திருவடிவாரத்திலே பணிந்திருந்து அதிகரித்து "சொல்லார் தமிழொரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லா அறநெறியாவுந் தெரிந்தவன்" என்னும்படியாகவே விளங்கினர்.

உசிதகாலத்தில் க்ருஹஸ்தாச்ரமத்தையும் ஸ்வீகரித்தருளி "மறந்திகழும் மனமொழித்து வஞ்சமாற்றி வன்புலன்களடக்கி இடர்ப்பாரத் துன்பந் துறந்து, இருமுப்பொழுதேத்தி யெல்லையில்லாத் தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டர்" என்ற ஸ்ரீகுலசேகரப் பெருமாளருளிச்செய்தபடியே ஸ்ரீவைஷ்ணவ சிகாமணியாய் வாழ்ந்து போருகிற காலத்திலே;

## ஆசார்ய ஆச்ரயணம்

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளிலே நெடுநாள் பணிந்திருந்து ஸகலசாஸ்த்ர ரஹஸ்ய ஸாரார்த்தங்களனைத்தையும் அதிகரித்தவராயும், ஆழ்வார்களுடைய ஈரச் சொற்களிலே அப்ரதிமமான அபிநிவேசம் காரணமாகத் திருவாய் மொழிப்பிள்ளை யென்று நிருபகநாமத்தைப் பெற்றவராயும், *நம: ஸ்ரீசைலநாதாய குந்தீநகர ஜந்மநே, ப்ரஸாத லப்த பரமப்ராப்ய கைங்கர்ய சாலிநே* என்று நிச்சலும் மூவுலகும் தொழுதேத்த நிற்பவராயுமிராநின்ற திருமலையாழ்வார் என்கிற மஹாசார்யர், இனி இந்த ஸ்ரீவைஷ்ணவ தர்சநத்தை நிர்வஹிக்க வல்லவர் யாவர்? என்று சிந்தித்திருப்பாராய் அதிகாரியைத் தேடியிருக்கையில் யாத்ருச்சிகமாக இவர் அவர் திருவடிகளிலே சென்று தெண்டன் ஸமர்ப்பித்து, 'பொருளல்லாதவென்னைப் பொருளாக்கி யடிமை கொள்ளவேணும்'

என்று ப்ரார்த்தித்து நிற்க, அவரும் இவருடைய அற்புதமான ஜ்ஞான பக்தி விரக்தி ஸம்பத் ஸம்ருத்தியைக் கண்டறிந்து அலப்யலாபம் பெற்றதாக நினைத்து ஆனந்தக் கடலில் அமிழ்ந்து வாரியணைத்து, இவரைத் தமக்கு மிகவும் அணுக்கராக அங்கீகரித்தருளி ஸதாசார்ய பரம்பராப்ராப்தமான ஸகல விசேஷார்த்த நிதியையும் பரமக்ருபையுடனே இவர்க்கு அநுக்ரஹித்தருளி, ஒருநாள் இங்ஙனே நியமிக்கலானார்;

## ஆசார்ய நியமநம்

வாரீர்! அழகிய மணவாளப் பெருமாளே! நீர் ஸர்வதோமுகமான ஜ்ஞானம் பெற்றிராநின்றீர்; எம்பெருமானாரை அவதார புருஷரென்று சிக்கன அறிந்திருந்தும் பெரியநம்பி, திருமாலையாண்டான் முதலானார் அவர்க்கு ஆசார்யராக அமைய நேர்ந்தாப்போல ஏதோ விதிவசமாக நானும் உமக்கு ஆசார்யனாக நின்றேன். என்னுடைய ஆஜ்ஞாநுவர்த்தநம் உமக்கு அவர்ஜநீயம் என்பதை நான் விரித்துரைக்க வேண்டாவே; ஆழ்வான் பட்டர் நம்பிள்ளை முதலான நம் பூருவர்கள் ஸகல சாஸ்த்ர ப்ரவீணர்களா யிருக்கச்செய்தேயும் ஆழ்வார்களின் ஈரச் சொற்களின் அநுபவத்திலேயே பெரும்பாலும் ஊன்றியிருந்து அவற்றைப் பிரவசனஞ் செய்வதையே முக்ய கைங்கர்யமாகக் கொண்டு வாழ்ந்தார்களென்பது உமக்குத் தெரியாமையில்லை. "முற்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாஸ புராணங்களையும் அதிகரித்து, பரபக்ஷப்ரதிக்ஷேபத்துக்கு உடலாக ந்யாய மீமாம்ஸைகளும் அதிகரித்து, போதுபோக்கும் அருளிச்செயலிலே யாம் நம்பிள்ளையைப் போலே" † என்று பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்திருப்பது அறிவீரே. நீரும் அப்படியே நம் பூருவாசாரியர்களை அடியொற்றி அருளிச்செயல்களின் ப்ரவசனங்களிலே அதிமாத்ரம் நிஷ்ணாதராயிருக்கக்கடவீர். இந்த என்னுடைய கோரிக்கையை நீர் ஹ்ருதய பூர்வமாக அங்கீகரித்தீரென்பதை நானறிந்து கவலை தீர்ந்தேனும்படி செய்யவேணும்" என்று நியமிக்க, உடனே அழகிய மணவாள நாயனார் (மாமுனிகள்) 'ராகப்ராப்தமானது தானே வைதமானால் கடுகப் பரிக்ரஹிக்கைக்கு உடலாயிருக்குமிறே" என்கிற பிள்ளை லோகாசார்யருடைய திவ்யஸூக்தியை ஸ்மரித்துப் பரமாநந்தங்

† இந்த வாக்கியம் பெரிய திருமொழியில் 5-5-7- • ஓதுவாய்மையுமென்கிற பாசுரத்தின் வியாக்கியானத்திலுள்ளது.

கொண்டு, பால் குடிக்கக் கால் பிடிக்குமாபோலே இப்படியும் ஒரு நிர்ப்பந்தம் வேணுமோ? ஸ்வாமி திருவடிகள் ஸாக்ஷியாக இந்தக் கைங்கரியத்தை அடியேன் சிரமேற்கொள்ளக் காத்திருக்கிறேன்; இதற்கு ஸர்வாத்மநா யோக்யதையற்ற அடியேனை யோக்யனாம்படி திருத்திப் பணிகொண்டருளவேணும்'' என்று விண்ணப்பித்துத் திருவடிகளிலே வேரற்ற மரம்போல் விழுந்து கிடக்க; திருமலையாழ்வாரும் வாரிப் பிடித்தெடுத்துத் தழுவி ''ஆமுதல்வனிவன்'' என்று குளிரக் கடாக்ஷித்தருளி அன்று முதலாகத் தம் திருவடிவாரத்திலே நிழலும் அடிதாறும் போலே இவரை வைத்துக்கொண்டிருந்து தம்முடைய சேமவைப்பான ஸகலார்த்த விசேஷங்களையும் க்ரமேண அநுக்ரஹித்தருளினார். நாயனாரும் க்ருதார்த்தராய்,

'அன்னையுமத்தனுமாசாரியனுமனைத் துறவும்
மன்னியபேறு முபாயமுந் தெய்வமும்மற்றுமெலாம்
என்னையளித்த திருவாய்மொழிப்பிள்ளை யென்றுநெஞ்சே!
உன்னியுவந்துதிகழ்ந்து சதிர்த்திவியுய்ந்திடவே''

என்று அநுஸந்தித்து அவரையன்றி வேறொரு தெய்வமறியாதே அவருடைய திருவடிகளில் அத்தாணிச் சேவகமும் அவருடைய ஆஜ்ஞாபரிபாலனமுமே போதுபோக்காக இருந்துவந்தார்.

## ஸ்வாமி யதீந்த்ரப்ரவணரென்கிற திருநாமம் பெறுதல்

திருவாய்மொழிப்பிள்ளை ஒருநாள் எம்பெருமானாருடைய குணாநுபவம் பண்ணிக்கொண்டிருக்கையில் ''மாறனடிபணிந்துய்ந்தவிராமானுசன்'' என்றும், ''உறுபெருஞ் செல்வமும் தந்தையும் தாயும் உயர் குருவும் வெறிதரு பூமகள் நாதனும், மாறன் விளங்கியசீர் நெறிதருஞ் செந்தமிழாரணமேயென்று இந்நீணிலத்தோர் அறிதர நின்ற விராமானுசன்'' என்றும், ''பண்டருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட எங்களிராமானுச முனிவேழம்'' என்றுமுள்ள பாசுரங்களைச் சிந்தைசெய்து, ஆழ்வார் திருவடிகளிலும் அருளிச்செயல் திறத்திலும் எம்பெருமானார்க்கு ப்ரஸித்தமாயிருந்த அதிமாத்ர ப்ராவண்யத்திற்குத் தகுதியாக இத்திருநகரியிலே அவர்க்கொரு தனிக்கோயில் அமைக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி சிஷ்யர்களுக்கு நியமித்து உடையவர் ஸந்நிதியையும் அதைச்சுற்றி ஸ்ரீராமாநுஜ சதுர்வேதிமங்கலம் என்கிற திருவீதியையும் ப்ரதிஷ்டிப்பித்து, 'இராமானுசனைத் தொழும் பெரியோ

ரையும் அங்கே நித்யவாஸஞ்செய்ய நியமித்தருளி அந்த நற்செல்வ மணைத்தையும் நாயனார்க்கு அதீனமாக்கியருளினர். நாயனாரும் அந்த உடையவர் திருவடிகளிலே மிகவும் பரிவராயிருந்து அங்குத்தைக்கு உரிய கைங்கர்யங்களையெல்லாம் குறையற நடத்திக்கொண்டு போருமது கண்டு திருவுள்ளமுவந்த திருவாய்மொழிப்பிள்ளை "யதீந்த்ரப்ரவணர்" என்று நாயனாரை அழைக்கத்தொடங்கினர். இந்த திருநாமமே அப்போது எங்கும் ப்ரஸித்தமாயிற்று.

## யதிராஜவிம்சதி அருளிச்செய்தல்

அந்த உடையவர் திருவடிகளிலே ஒரு ஸ்தோத்ரம் விஜ்ஞாபிக்க வேணுமென்று ஆசார்ய நியமனமாக, யதிராஜவிம்சதி யென்னும் ஸ்துதியை யதீந்த்ரப்ரவணர் விஜ்ஞாபித்து, அதில் [ஸ்ரீமந் யதீந்த்ர தவ திவ்ய பதாப்ஜ ஸேவாம்] என்கிற ச்லோகத்திலும் ஸ்வாசார்ய விஷயத்தில் உபகார ஸ்ம்ருதியையும் ப்ரகாசிப்பித்தருளினர். அப்போது அருகே யிருந்த முதலிகள்,

"வல்லார்கள்வாழ்த்துங்குருகேசர் தம்மை மனத்துவைத்துச்
சொல்லாரவாழ்த்தும் மணவாளநாயனர் தொண்டர்குழாம்
எல்லாந்தழைக்க எதிராசவிம்சதியின்றளித்தோன்
புல்லாரவிந்தத்திருத்தாளிரண்டையும் போற்றுநெஞ்சே"

என்ற பாசுரத்தை விஜ்ஞாபித்தனர்.

இந்த யதிராஜவிம்சதியின் மாதுர்யம் முதலிய குண விசேஷங் களைப்பற்றி அண்ணா வரவரமுனிசதகத்தில் அருளிச்செய்துள்ள ச்லோகங்கள் இங்கே அநுஸந்தேயம். எம்பெருமானுடைய அபராவ தார பூதரான மாமுனிகள் தம்மைத் தாமே துதிப்பதுபோல இந்த ஸ்தோத்ரம் அருளிச்செய்யலாமோ? அதிலும் அளவுகடந்தவாறுகத் தம்முடைய நைச்சியத்தைப் பேசியிருக்கின்றுரே, இது கூடுமா? என்று சிலர் சங்கிப்பர்கள்; * வேதவேத்யே பரேபும்ஸி ஜாதே தசரதாத்மஜே * என்கிறபடியே ஸ்ரீராமபிரான் ஸாக்ஷாத் நாராயணாவதாரமாயிருக்கச் செய்தேயும் * ஸஹபத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயண முபாகமத் * இத்யாதிப் படியே நாராயணனைத் தொழுதது, ஸ்ரீரங்கநாதனைத் திருவாராதனஞ் செய்துகொண்டிருந்தது முதலியனபோல் இவையும் அவதாரங்களுக் குப் பொருந்தியவைகளே என்று பெரியோர் கூறுவர்.

## ஸ்வாமிக்குத் திருக்குமாரர் திருவவதரித்தல்

அழகிய மணவாள நாயனார் இங்ஙனே ஆசார்ய பரதந்திரராய் வாழ்ந்தருளாநிற்க, க்ஷீரார்ணவத்தில் சந்திரன் போலே ஒரு திருக்குமாரர் திருவவதரித்தார். அவர்க்கு இராமாநுசப்பிள்ளை என்று திருநாமமிடும்படி ஆசார்ய நியமனத்தையடியொற்றி நாயனார் நியமித்தருளினார்.

## திருவாய்மொழிப்பிள்ளை திருநாடலங்கரித்தல்

அப்ரதிம சிஷ்ய ஸம்பத்தோடே வாழ்ந்தருளாநின்ற திருவாய்மொழிப்பிள்ளை திருமேனி தளர்ந்து திருநாட்டுக்கெழுந்தருளுகையிலே விருப்பமுடையராய்

"உத்தமனேயுலகாரியனே! மற்றொப்பாரையில்லா
வித்தகனே நல்லவேதியனே! வண்முடும்பைமன்னு
சுத்தநன்ஞானியர் நற்றுணையே சுத்தசத்துவனே!
எத்தனைகாலமிருந்துழல்வே னிவ்வுடம்புகொண்டே."

என்று அநுஸந்தித்துக் கொண்டிருக்க, ஒருநாள் கனவிலே பிள்ளை லோகாசாரியர் ஸேவை ஸாதித்தருளி "நலமந்தமில்லதோர் நாடு புகுவீர்" என்று பணிக்க, பிள்ளையும் தேறியெழுந்து நித்ய கர்மாநுஷ்டானங்களை நிறைவேற்றிக்கொண்டு முதலிகளெல்லாரையும் வரவழைத்து "இன்று விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் விதிவகையே" "வானேற வழிதந்த வாட்டாற்றான் பணிவகையே, நானேறப் பெறுகின்றேன் நரகத்தை நகுநெஞ்சே!" என்ற பாசுரங்களைப் பரக்க வுபந்யஸித்தருளி, "முதலிகாள்! இன்று எம்பெருமான் நம்மை ஆசாரியன் திருவடிவாரத்திற்கு அழைத்துக்கொள்வதாகத் திருவுள்ளம் பற்றியிரா நின்றான்; இனி நீங்களனைவரும் நம் அழகிய மணவாள நாயனாரை (மாமுனிகளை) ஸாமாந்யமாக ப்ரதிபத்தி பண்ணியிராமல் நம்பிராமானுசனுடைய அபராவதாரமே யிவர் என்று ப்ரதிபத்திபண்ணி இவருடைய அபிமானத்திலே யொதுங்கி வாழ்வீராக" என்று நியமித்தருளி, நாயனாரையும் ஆசார்யபீடத்திலே எழுந்தருளச்செய்து, "வாரீர் குலக்கொழுந்தே! * ஜநகாநாம் குலே கீர்த்திம் ஆஹரிஷ்யதி மே ஸுதா, ஸீதா பர்த்தாரமாஸாத்ய ராமம் தசரதாத்மஜம் * என்று ஜநக சக்ரவர்த்தி பாரித்தாப் போலே நானும் உம்மை அண்டைகொண்டு கனக்கப் பாரியாநின்றேன். நம்முடைய ஸ்ரீவைஷ்ணவ ஸந்தாநம் உம்மாலே பரம விலக்ஷணமான

பெருமையையும் புகழையும் ப்ராப்தமாகக்கடவது; *ச்ரேயாம்ஸி ஸர்வாண் யதிஜக்முஷஸ் தே * என்றாப்போலே ஒன்றிலுங் குறையில்லாத வுமக்கு இனி நாம் ஆசாஸிக்கவேண்டுவதொன்றில்லை. என் உள்ளத்திலே கிடந்த குறையைப் பண்டே உமக்குப் பேசிநின்றேன்; அக்குறைதீர இன்றுகாறும் நீர் நடந்துவந்ததுபோலவே இனியும் நம் பூர்வாசார்ய திவ்யக்ரந்த ப்ரவசநாநுபவங்களே போதுபோக்காக இருந்து வரக் கடவீர்; நம் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் ஒருமிடறாக மண்டியிருந்து தர்சந நிர்வாஹம் செய்தருளினவிடம் திருவரங்கம் பெரியகோவிலாத லால் நீரும் அவ்விடத்தேறச்சென்று முந்தின அவதாரத்திற் போலவே •அறுசமயச்செடியதனை யடியறுத்துச் செறுகலியைச் சிறிது மறத் தீர்த்துவிட்டுத் தென்னரங்கர் செல்வமுற்றுந் திருத்திவைத்து மறை யதனிற் பொருளனைத்தும் வாய்மொழிந்து மாறனுரை செய்த தமிழ்மறை வளர்த்து இந்த லீலாவிபூதியை நித்யவிபூதியாகவே ஆக்கிக்கொண்டு போரக்கடவீர்" என்று நாயனாரை நோக்கி நியமித்தருளி, அநந்தரம் ஸந்நிதிக்கெழுந்தருளிப் பொலிந்துநின்ற பிரானையும் ஆழ்வாரையும் மங்களாசாஸநம் செய்தருளி முதலிகளெல்லாரையும் நாயனார் திருக் கையிலே காட்டிக்கொடுத்துத் திருமாளிகையேறவெழுந்தருளிப் பிள்ளை யுலகாசிரியர் திருவடிகளைச் சிந்தித்துக்கொண்டே திருநாட்டுக் கெழுந்தருளினார். நாயனார் தொடக்கமான முதலிகளெல்லாரும் அவர்க்குத் திருவத்யயநாந்தமான சரம கைங்கர்யங்களைப் பெருக்க நடத்தினார்கள்.

## ஸ்ரீ வானமாமலைஸ்வாமி ஆச்ரயித்தல்

பிறகு நாயனார் ஸ்வாசார்ய நியமநத்தை சிரஸாவஹித்துக் கொண்டு பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளையெல்லாம் கண்டபாடஞ் செய்து வாசோவிதேய மாக்கிக்கொண்டு ப்ரஸித்த ப்ரபாவராய்த் திருநகரியில் எழுந்தருளியிருக்கு மதிசயம் கேட்டுப் பலதிசைகளிலிருந் தும் பல மஹான்கள் வந்து நாயனார் திருவடிகளிலே ஆச்ரயிக்கப் புகுந்தார்கள். முந்துற முன்னம், வானமாமலையிலே மஹாஜ்ஞாநாதிகரா யெழுந்தருளியிருந்த அழகிய வரதர் பரம விரக்தியினாலே ஆச்ரமஸ்வீ காரஞ் செய்து ஸ்ரீராமாநுஜஜீயர் என்று திருநாமம் பெற்று நாயனார் திருவடிகட்கு நிழலுமடிதாறும் போலே மிகவுமணுக்கராய் வந்து சேர்ந்து வாழ்ந்தார். இவர்க்குப் பொன்னடிக்கால்ஜீயர் என்றும் திருநாமம் வழங்கி வந்தது.

## நாயனார் நம்பெருமாள் ஸந்நிதிக்கெழுந்தருள நியமனம்பெறுதல்

ஸ்வாமி இங்ஙனமே பற்பல சிஷ்யர்களோடே கூடிவாழ்ந்தருளா நிற்கையில், ஒரு திருவாதிரைத் திருநாளில் கத்யத்ரயம் அநுஸந்தானம் நடைபெறுமளவில் * யாவச் சரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ * என்கிற ஸ்ரீ ஸூக்தி ப்ரகரணத்திலே ஸ்வாசார்யரான திருவாய்மொழிப் பிள்ளையின் நியமநத்தை ஸ்மரித்தருளி * ஆராமஞ் சூழ்ந்த அரங்கத்திலே நித்யவாஸஞ் செய்துகொண்டு பெரியபெருமாளுடைய மங்களாசாஸநமே போதுபோக்காக வாழ்வதிலே திருவுள்ளம் சென்று, ஆழ்வார் திருமுன்பே விடைகொண்டு தொழுது 'நாயினேன், நம்பெருமாள் ஸந்நிதிக்கு விடைகொண்டு அங்கே வர்த்திக்க ஆசார்ய நியமணமாகையாலும், "வான் திகழுஞ்சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல் ஆன்ற தமிழ் மறைகளாயிரமும்" என்கிறபடியே தேவரீருடைய அருளிச்செயல்களுக்கு ப்ரதாநப்ரமேயபூதரான பெரியபெருமாளுடைய திருவடிவாரத்திலே வாழ்வது அடியேனுக்கும் ருசித்திருக்கையாலும் அங்கே சென்று வர்த்திக்க நியமனம் தந்தருளவேணும் என்று ப்ரார்த்திக்க, ஆழ்வாரும் 'செங்கயல்பாய்நீர்த் திருவரங்கத்தே சென்று முகில்வண்ணனடியையடைந்து அருள்சூடியுய்யக்கடவீர்' என்று அநுக்ரஹித்து நியமனம் தந்தருளினார்.

## ஸ்வாமி ஸ்ரீரங்கயாத்திரை புறப்படுதல்

ஆழ்வாருடைய அருள்பொலிந்த நியமனம்பெற்ற நாயனார் 'தென்னரங்கர் சீராருக்கு இலக்காகப் பெற்றோம்' என்று திருவுள்ளம் பூரித்து முதலிகளும் தாமுமாகப் புறப்பட்டருளி * மென்னடையன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூருறைவான்றன் பொன்னடி காண்பதோராசையினால் அங்கே யெழுந்தருளி வடபெருங் கோயிலுடையானையும் பெரியாழ்வாரையும் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியையும் ஸேவித்து, அங்குள்ளாருடைய வேண்டுகோளுக்கிரங்கிச் சிலநாள் அங்கே யெழுந்தருளியிருந்து, அடிபணிந்த அன்பர்கட்கு நல்வார்த்தைகள் பல்வுமருளிச்செய்து அங்கு நின்றும் புறப்பட்டு * மாலிருஞ்சோலை மேய மைந்தனை வணங்கத் திருவுள்ளமாய் அங்கேற எழுந்தருளி * சிலம்பார்க்கவந்து தெய்வமகளிர்களாடுஞ் சீர்ச்சிலம்பாற்றிலே நீராடி அழகரை மங்களாசாஸனஞ் செய்து அங்கு ஆழ்வான் எழுந்தருளியிருந்த விடத்திலேயிருந்து ஸ்ரீ ஸுந்தர பாஹுஸ்தவத்தின் 'ஆழ்

பொருள்களை அடியவர்க்கு உபதேசித்தருளி, அங்கு நின்றும் புறப்பட்டு "வன்பெருவானகமுய்ய அமரருய்ய மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்யத், துன்பமிகு துயரகல அயர்வொன்றில்லாச் சுகம்வளர அகமகிழுந் தொண்டர் வாழ, அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளி கொள்ளு மணியரங்கன் திருமுற்றத்து அடியார்தங்கள், இன்பமிகு பெருங்குழுவுகண்டு யானுமிசைந்துடனே யென்றுகொலோ இருக்கும் நாளே" என்று இதுமுதலான பல பாசுரங்களையும், *கதாஹம் காவேரீ தடபரிஸரே* என்பது முதலான ச்லோகங்களையும் இனிமையாக அநுஸந்தித்துக்கொண்டே யெழுந்தருளிப் பயணகதியிலே, *எண்டிசைக் கணங்களு மிறைஞ்சியாடு தீர்த்தநீர் வண்டிரைத்த சோலை வேலிமன்னு சீரரங்கந்தன்னில்* கங்கையிற் புனிதமாய காவிரியையும் "வண்டினமுரலுஞ்சோலை மயிலினமாலுஞ்சோலை கொண்டல் மீதணவுஞ்சோலை குயிலினங் கூவுஞ்சோலை அண்டர்கோனமருஞ்சோலையையும் அணுகி *தென் திருவரங்கம் கோயில்கொண்ட தெய்வ சிகாமணியின் திருவடி வாரம் சேரப்பெற்றோமென்று திருவுள்ளமுவந்து நித்ய கர்மாநுஷ்டானங்களை நிறைவேற்றிக்கொண்டு,

"மாடமாளிகைசூழ் திருவீதியும் மன்னுசேர் திரிவிக்ரமன் வீதியும்
ஆடல்மாற னகளங்கன் வீதியும் ஆலிநாடனமர்ந்துறை வீதியும்
கூடல்வாழ் குலசேகரன் வீதியும் குலவுராசமகேந்திரன் வீதியும்
தேடுதன்மவன்மாவவன் வீதியும் தென்னரங்கர் திருவாவரணமே."

என்று சொல்லப்படுகிற திருவீதிகளை யெல்லாம் கண்ணாரக்கண்டு களித்துக்கொண்டு உள்ளே யெழுந்தருளினார்.

அக்காலத்தில் அங்கு அண்ணர் என்கிற ஒரு மஹான் ப்ரஸித்தராக எழுந்தருளி யிருந்தார்; நாயனார் அவருடைய திருமாளிகையேற எழுந்தருளிநிற்க, அவரும் இவருடைய வைபவங்களைப் பண்டே கேட்டிருந்தவராகையாலே இவரை நிதிகண்டாற்போலே கண்டு பல்வகை யுபசாரங்களும் செய்து சிறிது வார்த்தையாடின வளவிலே இவருடைய ஸர்வஜ்ஞத்வத்தையுணர்ந்து வியந்து அவதார விசேஷமென்று ப்ரதிபத்திபண்ணி இவர்க்குப் பெருமாள் ஸந்நிதியிலே பல சிறப்புக்களும் செய்விக்கக்கருதி, அப்போது ஸந்நிதிக்கு நிர்வாஹகராயிருந்த திருமாலைதந்த பெருமாள்பட்டர் என்கிற மஹநீயர்க்குச் செய்தியறிவிக்க, அவரும் நாயனார் திருவடிகளிலே வந்து ஸேவித்துச் சில நல்வார்த்தைகள் கேட்கப் பெற்றவளவிலே,

"ஸ்ரீமாந் ஸ்ரீபாஷ்யகாரோஸௌ பூதலே புநருத்தித:,
இதி நிச்சித்ய ஸந்துஷ்ய ப்ராவண்ய மதுலம் நதே."

என்கிறபடியே நாயனாரை எம்பெருமானாருடைய புநரவதாரமாகவே அறுதியிட்டுப் பரிஜந பரிபர்ஹபரிச்சத புரஸ்கார விசேஷங்களுடனே ஸந்நிதியில் மங்களாசாஸநம் நடைபெறுமாறு ஸம்விதாநம் செய்து வைத்தார்.

## கோயிலில் மங்களாசாஸநம்

பலபல பரிவாரங்களுடன் ஸந்நிதி மங்களாசாஸனத்திற்கு எழுந்தருளின நாயனார் முந்துறமுன்னம் எம்பெருமானார் ஸந்நிதியிலே விடைகொண்டு ஸேவித்து உடையவர் திருக்கோலத்திலே மிகவும் ஈடுபட்டு,

"இவ்வுலகந் தன்னி லெதிராசர் கொண்டருளும்
எவ்வுயிரும் யான்சென் றிறைஞ்சினக்கால்—அவ்வுருவம்
எல்லா மிலிதேனு மிவ்வரங்கத் திற்போல
நில்லாதென் னெஞ்சில் நிறைந்து

என்கிற பாசுரத்தை அங்கு விண்ணப்பஞ்செய்து, பிறகு ஸபரிவாரரான பெரிய பெருமாளை அடைவே மங்களாசாஸனஞ் செய்து திருமாலை, அமலனாதிபிரான் முதலான திவ்யப்ரபந்தங்களையும் ஸ்ரீரங்கராஜஸ்தவம் முதலான ஸ்தோத்ரங்களையும் அநுஸந்தித்துக்கொண்டு நம்பெருமாள் திருமுன்பே நிற்க, பெருமாளும் நாயனாரைக் குளிரக் கடாக்ஷித்தருளி 'நமக்காவாரை நாமே தேடிக்கொண்டோம்; நம்முடைய அவாப்த ஸமஸ்த காமத்வம் இன்றே குறையற்ற தாய்த்து" என்றருளிச் செய்து ஸகல வரிசைகளும் ப்ரஸாதித்தருள, நாயனாரும் பெற்று க்ருதார்த்த ராய், "பெரியார்க் காட்பட்டக்கால் பெறுத பயன் பெறுமாறு" என்று அண்ணனார் விஷயத்திலும் பட்டர் விஷயத்திலும் க்ருதஜ்ஞதாநு ஸந்தாநம்பண்ணிப் பேருவகையோடே திருமாளிகைக் கெழுந்தருளினார்.

பின்பு பிள்ளையுலகாசிரியர் திருமாளிகையைநோக்கி யெழுந்தருளி வாசலிலே தெண்டன் ஸமர்ப்பித்து "ரஹஸ்யம் விளைந்தமண்' என்று அவ்விடத்து மண்பற்றை மிகவும் ஆதரித்து, நாடோறும் அங்கேற வெழுந்தருளி ரஹஸ்யக்ரந்த ப்ரவசநாதிகள் செய்துகொண்டு, * ஸமயாந் ஆநந்தமயாந் சமயாமாஸஷ ஸங்கிநாம் ஸமயா * (ஸ்ரீவரவரமுநி காவ்யே) என்கிறபடியே ஆனந்தமயமாகப் பொழுதுபோக்கி வந்தார்.

## ஸ்வாமி திவ்யதேசயாத்திரை யெழுந்தருளல்

இங்ஙனே சிலநாள் சென்றவாறே, சோழநாடு நடுநாடு தொண்டைநாடுகளிலுள்ள திருப்பதிகளெல்லாவற்றையும் ஸேவிக்கத் திருவுள்ளம்பற்றின நாயனார் பெரியபெருமாள் பாடே சென்று நியமனம் பெற்றுக்கொண்டு சிஷ்யவர்க்கங்களுடனே புறப்பட்டருளினார். வழியடைவிலே ஸகல திவ்ய தேசங்களையும் ஸேவித்துக்கொண்டு வருமளவிலே திருமலையில் திருவேங்கடமுடையானுக்குப் புரட்டாசித் திருநாள் அணித்தென்றறிந்து அங்கேற வெழுந்தருளித் திருமலையப்பனுடைய ஒப்புயர்வற்ற ஸத்காரங்களையும் லபித்து அங்குநின்றும் புறப்பட்டுப் பெருமாள் கோயிலுக்கு எழுந்தருளினார்.

## பேரருளாளன் மங்களாசாஸனம்

பிறகு பெருமாள் கோயிலிலுள்ள ஸகல திவ்யதேசங்களையும் அடைவே ஸேவித்து, பெருந்தேவி மணவாளனான பேரருளாளனது வடிவழகில் மிகவு மீடுபட்டு ஸ்ரீ தேவராஜ மங்களம் என்கிற மங்கள ஸ்துதியை அடியவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி அருளிச்செய்தார். அன்றியும் பெருமாள் கோயிலிலுள்ள ஸகல திவ்யதேசத் தெம்பெருமான்களையும்சேர அநுஸந்தித்து இரண்டு ச்லோகமருளிச்செய்ததாகவும் பெரியோர் வழங்குவர். (அவற்றை ஸம்ஸ்க்ருத வைபவ நூலில் காண்க)

## ஸ்வாமி ஸ்ரீபாஷ்யமதிகரித்தல்

ஸ்வாமி தாம் அவதார விசேஷ ப்ரயுக்தமான ஸர்வஜ்ஞத்வ பூர்த்தியை யுடையவராயிருக்கச்செய்தேயும், இந்நிலவுலகின் கட்டளைக் கிணங்கவும், ஸ்வாசார்யரான திருவாய் மொழிப்பிள்ளையின் நியமனத்திற்குச்சேரவும் ஓர் ஆசார்ய ஸகாசத்திலே ஸ்ரீபாஷ்யத்தை அதிகரிக்கத் திருவுள்ளம்பற்றி, அப்போது பெருமாள் கோயிலில் எழுந்தருளியிருந்தவரும் ஸத்ஸம்ப்ரதாய சுத்தி வாய்ந்தவருமான கிடாம்பி நாயனார் என்கிற ஸ்வாமியின் ஸந்நிதியிலே [முந்தின அவதாரத்திலே தாமே அருளிச் செய்ததான] ஸ்ரீ பாஷ்யத்தை ஸேவிக்க எம்பெருமானாருடைய நியமனம் பெற விரும்பி, ஒரு திருநன்னாளில் ஸ்ரீ பெரும்பூதூர்க்கு எழுந்தருளினார். அங்கே விடுதியாகப் பல பாசுரங்கள் அருளிச்செய்தவை யுண்டு; அவற்றுள் சில வருமாறு :—

"இதுவோ பெரும்பூதூர் இங்கே பிறந்தோ
எதிராசரெம்மிடரைத் தீர்த்தார்—இதுவோதான்
தேங்கும் பொருநல் திருநகரிக் கொப்பான
ஓங்கு புகழுடைய வூர்."

"எந்தை யெதிராசர் எம்மை யெடுத்தளிக்க
வந்த பெரும்பூதூரில் வந்தோமோ—சிந்தை
மருளோ தெருளோ மகிழ்மாலை மார்வ
னருளோ விப்பேற்றுக் கடி."

இத்யாதிகள்.

அங்கே எம்பெருமானாரைத் திருவடி தொழுது விடைபெற்று மீண்டும் கச்சிப்பதியேற வெழுந்தருளிக் கிடாம்பி நாயனார் பக்கல் ஸ்ரீ பாஷ்யம் ஸேவித்துத் தலைக்கட்டின வளவிலே, சில மஹான்கள் ஸ்வாமி திருவடிகளிலே ஸ்ரீபாஷ்யம் ஸேவிக்க விருப்பங்கொண்டு மிகவும் பிரார்த்திக்க, ஸ்வாமியும் திருவுள்ளமுகந்தருளி ஸ்ரீ யதோக்தகாரி யெம்பெருமான் ஸந்நிதியிலே ஒரு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து ஸ்ரீபாஷ்ய ப்ரவசநம் செய்தருளினர். [இதுபற்றியே திருவெஃகாவில் மணவாள மாமுனிகள் வியாக்கியான முத்திரையோடு ஸேவை ஸாதித்தருளும்படி யென்று பெரியார் பணிப்பது.]

## ஸ்வாமியினுடைய ஸகல சாஸ்த்ர பாரங்கதத்வம்

ஸ்வாமீ தாம் ஸ்ரீபாஷ்யம் அதிகரிக்கிற காலத்திலும் சிஷ்யர்களுக்கு அதை ப்ரவசனம் செய்தருளும் காலத்திலும் தம்முடைய ந்யாயமீமாம்ஸாதி ஸகல சாஸ்த்ர பாராவார பாரீணத்வத்தைப் பலமுகமாக ப்ரகாசிப்பித்தருளினர். தர்க்க மீமாம்ஸாதிகளில் பாண்டித்யம் பெற்றவர்கள் மற்றும் பல ஆசிரியர்கள் உளரெனினும் ஸ்வாமி தமக்கு அமைந்திருந்த பாண்டித்யப்ரகர்ஷம் பரம விலக்ஷணமென்பது ஸ்வாமியிட்டருளின வியாக்கியானங்களில் அக்ஷரந்தோறும் அதிஸ்புடமாக விளங்கும். ஒவ்வொரு ஸ்ரீஸூக்தியும் சாஸ்த்ரார்த்த ஸாரமே வடிவெடுத்ததென்னலாம்படியும், "அம்பரமே தண்ணீரே சோறேயறஞ் செய்யும்" என்கிற விடத்திற்கு வியாக்கியானஞ் செய்தருளுகிற கணக்கிலே 'இஃது ஒன்றேயோ இவர் கற்றது. இஃது ஒன்றேயோ இவர் கற்றது!' என்று வியக்கும்படியும் அமைந்திருக்கையாலே இவருடைய

ஸர்வதோமுகமான பாண்டித்யம் வேறெங்கும் காணக் கிடைக்காத தொன்று. "செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவர்" என்கிற திருமங்கையாழ்வாரருளிச்செயலுக்கு முக்கிய இலக்காக விளங்கினவர் கடல்சூழ்ந்த இம்மண்ணுலகில் இந்த வ்யக்திவிசேஷ மொன்றே யென்னத் தட்டில்லை.

## ஸ்வாமி கோயில் சென்று சேர்தல்

இங்ஙனம் கச்சிப்பதியிலே ஒரு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து அடியார்களை வாழ்வித்தருளி மீண்டும் திருவரங்கம் பெரிய கோயிலில் சென்று சேர்ந்த நாயனார், அவ்விடத்திலே *பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே யாள்கின்ற வெம்பெருமானை செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாருடைய விசேஷ கடாக்ஷத்திற்கு இலக்காகி *வன்பெரு வானகமுய்ய அமரருய்ய மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்யத் துன்பமிகு துயரகல அயர்வொன்றில்லாச் சுகம் வளர அகமகிழுந் தொண்டர்வாழ அர்த்த விசேஷங்களை அடியவர்களுக்கு அநுக்ரஹித்தருளா நின்றுகொண்டு "இருமுப்பொழுதேத்தி யெல்லையில்லாத் தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டர்." என்கிற வ்யபதேச விபூஷிதராய் லீலாவிபூதியை நித்ய விபூதியாக்கிக்கொண்டு விளங்கிவந்தார்.

## ஸ்வாமி ஆச்ரம ஸ்வீகாரம் செய்தருளல்

அக்காலத்தில், ஸ்வாமிக்கு ஜ்ஞாதிகள் பலரிருந்தமையால் அடிக்கடி ஆசௌச ப்ரஸங்கம் நேர்ந்து க்ரந்த காலக்ஷேபத்திற்கும் பெருமாளுடைய மங்களாசாஸனத்திற்கும் இடையூறு விளைந்துவந்தது கண்டு க்ருஹஸ்தாச்ரமத்திலே வெறுப்புண்டாகி உத்தமாச்ரமஸ்வீகாரம் செய்தருளத் திருவுள்ளமாய், அப்போது கோயிலிலே ஸ்ரீசடகோப ஜீயரென்று ப்ரஸித்தராய் ஞானமனுட்டான மிவை நன்றாகவே யுடையராயிருந்த மஹநீயர் பக்கலிலே துரீயாச்ரமம் ஸ்வீகரித்து நம்பெருமாளை மங்களாசாஸனம் செய்யச்சென்று நின்றவளவிலே, பெருமாளும் இவரை ஆதரித்தருளித் தம்முடைய திருநாமத்தையே இவர்க்கு ப்ரஸாதித்தருளி [அழகிய மணவாள மாமுனிகள் என்றிட்டு] ஸகல மரியாதைச் சிறப்புகளையும் * யாவச்சரீர பாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ * என்று எம்பெருமானார்க்குப் போலே நியமனம் தந்தருளி, பல்லவராயன்

மடத்தையும் ஸ்வாமிக்குப் பரிசாக ப்ரஸாதித்து அணைத்துக் கொத்துப் பரிகரங்களுடனே போகவிட்டருள, அழகிய மணவாள மாமுனிகளான நாயனார் பெருமாளுடைய திருவருள் நிரம்பிய நியமனத்தைச் சிரஸா வஹித்து மடமேற எழுந்தருளி அழகிய மணவாளனுடைய அருட் பெருக்குக்கு அதிமாத்ரம் உகந்து போந்தார். அக்காலத்திலே மாமுனி களின் அப்ரதிமவைபவம் தேசமெல்லாம் பரந்து திகழ, உலகம் நிறைந்த புகழாளரான மாமுனிகளின் திருவடிவாரத்திலே பலதிசை களில் நின்றும் பலர்வந்து ஆச்ரயித்து, ஸ்ரீமந் நாதமுனிகள் ஆளவந் தார் எம்பெருமானார் முதலான பூருவாசாரியர்களை ஸேவிக்கப்பெறாத குறைதீர அவ்வாசிரியர்களனைவரும் இங்ஙனே ஒரு திருக்கோலமாக வடிவெடுத்து ஸேவை தந்தருள்வதாக அறுதியிட்டு க்ருதார்த்தர்களாய் வாழ்ந்து வந்தார்கள்.

## திருமலையாழ்வார் திருமண்டபம் அமைத்தல்

மாமுனிகள், தம்முடையமடத்தில் ஒருபகுதியை ஸ்வாசார்யரான திருவாய் மொழிப் பிள்ளையின் திருநாமத்தினால் காலக்ஷேப கூடமாக அமைத்தருளி, அதில், "முன்னவராம் நம் குரவர் மொழிகள் உள்ளப் பெற்றோம்" என்று (ஆர்த்தியில்) தாமே அருளிச்செய்தபடி பூர்வா சார்ய திவ்ய ஸ்ரீஸூக்திகளை சிஷ்யவர்க்கங்களுக்கு ப்ரவசனம் செய்தருளி வந்தார். *அத ஸ்ரீசைல நாதார்ய நாம்நீ ஸ்ரீமதி மண்டபே* என்று தொடங்கி எறும்பியப்பாவாலும் திநசர்யையில் இது அநுஸந்திக்கப்பட்டது.

இங்ஙனம் திருவாய்மொழிப் பிள்ளை திருநாமத்தாலே திருமலை யாழ்வாரென்று அமைந்த திருமண்டபத்திலே, பிள்ளை லோகாசார்யர் திருமாளிகையில் நின்றும் "ரஹஸ்யம் விளைந்த மண்" என்று விலக்ஷண மான சிறப்புப்பெற்ற திருமண்ணைக் கொணர்ந்து காலக்ஷேப ஸ்தலத் திற்குக் காப்பிடுவித்து அவ்விடத்தை குருகுல வாஸமாகவே எண்ணி யெழுந்தருளியிருந்து முமுக்ஷுக்களுக்கு அருமருந்தானவற்றை அடி பணிந்தவர்களுக்கு அருளிச்செய்யா நின்றுகொண்டு எண்டிசையும் புகழோங்க வாழ்ந்து வந்தார்.

## பட்டர்பிரான் ஜீயர் வந்து ஆச்ரயித்தல்

இப்படி நடந்து போருங்காலத்திலே 'கோவிந்த தாஸரப்பன்' என்று திருநாமமுடைய பட்டர்பிரான் ஜீயர் வந்து மாமுனிகளின்

திருவடிகளிலே ஆச்ரயித்து எம்பெருமானர் திறத்தில் எம்பார்போலே இறையுமகலகில்லாதே பாதச்சாயைபோலேயிருந்து பிரியாவடிமை செய்துவந்தார். அடியார்கட்குச் சேமவைப்பாக மாமுனிகள் அருளிச் செய்யும் அர்த்த விசேஷங்கள் அனைத்துலகும்பரவ, நாடோறும் பலபல மஹான்கள் வந்து திருவடி ஸம்பந்தம்பெற்று, உபய விபூதியிலும் ஒத்தாரும் மிக்காருமில்லாத மஹாசார்யர் இவரொருவரேயென்று அறுதியிட்டு அநுஸந்தித்துப் போந்தார்கள்.

## கோவில் கந்தாடையண்ணன் ஆச்ரயித்தல்

கோயிலில் ஆசார்ய புருஷர்களில் ஒருவராக விளங்கிநின்ற கந்தாடையண்ணனும் மாமுனிகளின் திருவடி ஸம்பந்தமே நமக்கு ஸர்வஸ்வம் என்று நிச்சயித்துப் பெரியபெருமாளுடைய நியமனத்தையும் பெற்று ஸபரிகரராய் வந்து "காதம்பலவும் திரிந்துழன்றேற்கு அங்கோர் நிழலில்லை நீருமில்லை. உன்பாத நிழலல்லால் மற்றோர் உயிர்ப்பிடம் நானெங்கும் காண்கின்றிலேன்" என்று அநுஸந்தித்துத் திருவடிகளிலே வேரற்ற மரம்போலே விழுந்து மாமுனிகளின் பரிபூர்ணமான திருவருளைப் பெற்று. அந்நாள் தொடங்கி அவரது திருவடித்தாமரைகளையே பழுக்க ஸேவித்துக்கொண்டு அங்குத்தைக்கு அந்தரங்கராயிருந்துவந்தார்.

## வேடல்அப்பையை வரவழைத்தல்

இப்படியிருக்கையில், மாயாவாதியான ஒரு பண்டிதன் வட தேசத்தில் நின்றும் அங்குவந்து, அவ்விடத்தில் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ருத்தியையும் மாமுனிகளின் மஹிமையையுங்கண்டு பொறுக்கமாட்டாத அஸூயாவேசத்தாலே செருக்குமிக்கு அங்குள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களை அதிக்ஷேபித்துக்கொண்டு "வல்லீராகில் என்னை வென்று ஸித்தாந்தத்தை நிலை நிறுத்திக்கொள்ளீர்" என்று சொல்லி ஒரு தூதுவனை மாமுனிகள் பக்கலில் வரவிட்டான். அந்த மாயாவாதியானவன் முன்பு 'வேடல் அப்பை' என்னும் ஸ்வாமியின் சிஷ்யனாய் வைஷ்ணவோத்தமனாயிருந்து ஸஹவாஸ தோஷத்தாலே கெட்டு மாயிமதத்திற் புகுந்தவனாதலால் ஆருடபதிதனான அவன் முன்னே போய் நிற்கவும், திவ்யஸூக்தி ஸுதாஸ்வாதத்தை விட்டுக் கருவிலே திருவிலாத அவனோடே வாதுசெய்யவும் விரும்பாத மாமுனிகள் வாதூல

வம்சத்தவரான அந்த வேடலப்பையைக் கொண்டே அவன் செருக்கை யடக்கத் திருவுள்ளம்பற்றி வேடலில் நின்றும் அவரை வரவழைத்து வாத யுத்தத்திற்குப் போகவிட, இங்ஙனே தனது ஆசாரியரே வாதம் நிகழ்த்த வந்துவிட்டாரென்றறிந்த அந்த மாயாவாதி கருடனைக்கண்ட பாம்புபோல அஞ்சி நடுங்கி வணங்கி வழிபட்டுப் போயினன்.

பிறகு மாமுனிகள் வேடலப்பையை ஸத்கரித்து 'இங்கே நமக்கு உசாத்துணையாக இரும்' என்று நியமித்தருளினர். அருளிச்செய லம்ருதபானத்திலே அநவரதம் ஆழ்ந்து *தேவுமற்றறியேன் குருகூர் நம்பி பாவினின்னிசை பாடித்திரிவனே* என்ற மதுரகவிகளின் நிலையிலே நின்று மன்னியசீர் மாறன்கலை உணவாகப் பெற்றேமென் றிருக்கும் மாமுனிகளுக்கு அம்ருதபான விரோதிகளாகநேரும் மசகமக்ஷிகாதிகளை அகற்றவும் மேன்மேலும் தர்சந நிர்வாஹம் செய்துகொண்டு போகவும் வல்லவரான ஒருவரைத் தம்முடையஸன்னிதியிலே வைத்துக் கொண்டு பழக்கவேணுமென்னும் அவா அதிகரித்திருந்தமையாலே அப்பையைக் கடாக்ஷித்து இங்ஙனே நியமிக்கலாயிற்று. அவர் ஸ்வக்ராமவாஸத்தை விட்டுக் கோயில் வாஸத்திலே ருசிபெறவொட் டாத ப்ரக்ருதிபந்தத்தாலே மந்தராய் 'அடியேனுக்கு விடை தந்தருள வேணும்' என்று நியமனம் பெற்றுக்கொண்டு ஊர் போய்ச் சேர்ந்தார்.

## பிரதிவாதி பயங்கரம் † அண்ணனைத் திருவுள்ளம் பற்றுதல்

மாமுனிகள் தம்முடைய மநோரதம் நிறைவேறப் பெருமையாலே 'இனி இதுக்கு ஆவாரார்?' என்று விசாரியா நிற்கையில், பிரதிவாதி பயங்கரம் அண்ணனைப்பற்றிக் கேள்விப்பட்டு, அவர் மஹாஸமர்த்தராய் ஆத்மகுண ஸம்பந்நராய்த் திருமலையில் திருவேங்கடமுடையானுக்கு வழுவிலாவடிமை செய்து கொண்டு ஸகுடும்பமாக எழுந்தருளி யிருக்கிரு ரென்றும் உணர்ந்தருளி 'ஆம் முதல்வனிவன்' என்று திருவுள்ளத்திலே கனக்கக் கடாக்ஷித்து அவரைக் கோவிலுக்கு அழைத்து வருமாறு இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்களை ஸ்ரீமுகத்துடன் திருமலைக்குப்போகவிட்டார்.

† இவர்க்கு அண்ணன் என்றே திருநாமமாயினும் ஏற்கெனவே ஆச்ரயித் திருந்த கோயிலண்ணனிற்காட்டில் இவர்க்குத் திருநாமவாசி தோற்ற 'அண்ணு' என்று வ்யவஹரித்து வருதார்கள். அதுபற்றியே 'ப்ரதிவாதி பயங்கரம் அண்ணு' என்றே தானைக்கும் வ்யபதேசம்.

## ப்ரதிவாதிபயங்கரம் அண்ணனுடைய செய்தி

ஸ்ரீகாஞ்சீபுரியில் நயனவரதாசார்யஸ்வாமிபக்கலிலே சிலகாலம் வேதாந்த ச்ரவணம்பண்ணி 'ப்ரதிவாதி பயங்கரர்' என்கிற விருதையும் பெற்று விக்யாதராய் விளங்கிநின்ற அண்ணன், சிறிதுகாலம் திருவேங்கடமலையில் வாழ்ந்து அப்பனுக்குத் தொண்டுபூண்டு அமுதமுண்ண வேணுமென்று கருதி அங்கேசென்று நாடோறும் ஆகாச கங்கையிலிருந்து திருவாராதனத்துக்கும் திருமஞ்சனத்துக்கும் தீர்த்தம் கொணர்ந்து ஸமர்ப்பிக்கிற கைங்கரியத்தில் ஊன்றியிருந்தார்.

இப்படியிருக்கையில் ஒருநாள் கோயிலில் நின்றும் மணவாள மாமுனிகளின் திருவடி ஸம்பந்தியானவொரு பரமைகாந்தி திருமலைக்கு எழுந்தருள, அண்ணன் அவரை மிகவும் உபசரித்துப் பெருமாள்ஸேவை முதலானதுகளைப் பண்ணி வைத்துத் தமது திருமாளிகையிலேயிருத்தி வார்த்தைகள் சொல்லிக்கொண்டிருக்கையில், அவர் மணவாளமாமுனிகளின் வைபவ விசேஷங்களை எடுத்துரைக்க அவற்றைச் செவிமடுத்த அண்ணன் பரம பக்தியுக்தராய், 'இன்னஞ் சொல்லாய் சீமானே!' என்று மேன்மேலும் அந்த திவ்ய வைபவங்களைச் சொல்லுமாறு வேண்டி அவருடனே ஸல்லாபங்கள் செய்துகொண்டே மறுநாள் காலையில் ஆகாச கங்கைக்கு நித்தியம்போல் எழுந்தருளி நித்யாநுஷ்டானங்களை நிறைவேற்றித் திருவேங்கடமுடையான் திருவாராதனத்துக்காகத் தீர்த்தத்தைக் கும்பத்தில் பூரித்தெடுத்துக்கொண்டு திருமாளிகைக் கெழுந்தருளி மணவாள மாமுனிகளின் வைபவச்ரவணத்தில் பரவச ஹ்ருதயராய்த் திருமஞ்சன கைங்கர்யத்தில் த்வரையின்றிக்கே ஸாவகாசராய் இருந்துகொண்டு பரிமள த்ரவ்யங்களால் தீர்த்தத்தை ஸம்ஸ்கரிக்க யத்னித்துக் கொண்டிருக்கையில் திருவேங்கட முடையான் ஸன்னிதியில் நின்றும அர்ச்சகர் தாமே விரைந்தோடிவந்து "திருவாராதன காலம் கடந்தும் தெரியாமே இப்படி அசிரத்தராய் விலம்பித்திருப்பது நன்றாயிருக்கிறது! தீர்த்தக் குடத்தை இப்படி கொடும்" என்று நிஷ்டுரமாகப் பேசி அந்தத் தீர்த்தக் கும்பத்தைப் பரிமள ஸம்ஸ்காரமின்றியே பலாத்காரமாக வாங்கி யெடுத்துக்கொண்டு சடக்கெனக் கோயிலுக்குப் போய்விட்டார்.

அநவதானத்தால் இன்று இப்படி அபசாரப்பட நேர்ந்ததே! என்று அண்ணன் அநுதபித்துக்கொண்டே பரிமளத்ரவ்யங்களை

யெடுத்துக்கொண்டு மிகவும் விரைந்து ஸந்நிதிக்கு எழுந்தருள்வதற்குள்ளே திருவாராதனம் உபக்கிரமித்து நடந்துகொண்டிருப்பதறிந்து அஞ்சி நடுங்கி விநயத்துடனே உள்ளே சென்று அந்தப் பரிமள த்ரவ்யங்களை அர்ச்சகரிடத்தில் கொடுத்துவிட்டு வெள்கி வெளியே நிற்கையில், அநுதப்தராயிருக்குமிவரைத் தேற்றுவிக்கத் திருவுள்ளங்கொண்ட திருவேங்கடமுடையான் 'வாரீர் அண்ணனே! இன்று நீர் கொணர்ந்த தீர்த்தம் பரம போக்யமாயிராநின்றது; இத்தனை நாளும் போலன்றிக்கே இன்றைத் தீர்த்தத்தில் ருசியும் பரிமளமும் விலக்ஷணமாயிராநின்றது காணும்; உம்முடைய சிறந்த பக்திக்கு நாம் உகந்திருக்க, இங்ஙனே நீர் வருந்தக் கடவீரல்லீர்' என்று அர்ச்சகமுகேந அருளிச்செய்ய, அந்த திவ்ய ஸூக்தியைக் கேட்டவாறே அண்ணன் பரம விஸ்மிதராய், 'பரிமளத்ரவ்யமொன்றும் சேராதிருக்கவும் இன்று திருமலைமால் இங்ஙனே திருவுள்ளமுகந்து அருளிச்செய்யக் காரணமென்னோ!' என்று விமர்சித்து மணவாள மாமுனிகளுடைய வைபவங்களைச் செவியேற்றுக்கொண்டே இன்று இந்தத் தீர்த்தம் பூரித்தோமாகையால் அந்த உத்தமாசார்ய வைபவச்ரவணமே இத்தனை அதிசயத்துக்கு அடியாக வேணுமென்று அறுதியிட்டு அது முதலாகவே மாமுனிகளை விரைவில் ஸேவிக்கப்பெற வேணுமென்று குதூஹலம் அதிகரிக்கப்பெற்று இரவும் பகலும் அதுவே சிந்தையாயிருந்து வந்தார். இந்த மநோரதத்துடனே சிலநாள் சென்றவாறே திருமலையப்பனிடத்தில் நியமனம் பெற்றுக்கொண்டு, மணவாளமாமுனிகளின் திருவடிகளிலே ஆச்ரயித்து உய்வதாக அங்கு நின்றும் புறப்பட்டு மார்க்க க்ரமத்திலே பெருமாள் கோயிலிலே வந்து சேர்ந்து பேரருளாளனைத் திருவடி தொழுது ஒன்றிரண்டுநாள் அங்கே தங்கிக் களித்திருந்தார்.

ஏற்கெனவே மாமுனிகளின் திருமுகத்துடன் புறப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் பயணகதியிலே பெருமாள் கோயிலைச் சென்று சேர்ந்தார்கள். யாத்ருச்சிகமாக அண்ணன் அவ்விடத்திலே எழுந்தருளியிருக்கிற செய்தியறிந்து பெருமகிழ்ச்சி கொண்டு அவரைக் கண்டு ஸேவித்து மாமுனிகளின் திருமுகத்தைத் தந்தார்கள். அண்ணனும் அதனை ஆதரவுடன் பெற்று வாசித்துப் பரம ஸந்தோஷ பரவசராய் அந்த ஸ்ரீவைஷ்ணவர்களை நோக்கி 'வாரீர்கோள்! இன்று அடியேனுடைய பாக்ய பரிபாகம் என்னே! மாமுனிகளை ஸேவிக்க நெடுநாளாக விரும்பித் திருமலையில் நின்றும் கோயிலுக்குப் பயணப்பட்டு

இங்கேற விடைகொண்ட அடியேனுக்கு இன்று இந்தத் திருவாணைத் திருமுகம் கிடைத்ததானது • கோரமாதவஞ் செய்தனன் கொலறியேன் • •வித்தீவாய்க்கின்ற வாய்க்குங்கண்டீர் • யானே தவமுடையேன் • இத்யாதி அநுஸந்தானங்களைச் செய்விக்கின்றது; மாமுனிகளின் நிர்ஹேதுக விஷயீகாரத்திற்கு இலக்காகப்பெற்ற அடியேனுக்கு ஆரும் நிகரில்லை; நல்லது; நெடுந்தூரம் வந்த நீங்கள் போர விடாய்த்திகோளாதலால் சிறிது இங்கே விச்ரமித்தல் நன்று; பேரருளாளனுடைய நியமனம் பெற்றுப் புறப்படுவோம்'' என்று சொல்லி அவர்களை மிக உபசரித்து விச்ரமிக்கச் செய்தனர்.

அண்ணன் மறுநாள் காலையில் அந்த ஸ்ரீவைஷ்ணவர்களுடன் பேரருளாளனைத் திருவடி தொழுது நியமனம் பெற்றுக்கொண்டு அன்றே ஸகுடும்பமாய்ப் புறப்பட்டுப் பயணகதியிலே திருவரங்கம் பெரியகோயிலைச்சென்று கிட்டி நித்யாநுஷ்டானங்களை நிறைவேற்றிக் கொண்டு மாமுனிகளின் திருவடிவாரத்திற் சென்று சேர்ந்தார். •தாய்நாடு கன்றேபோல் ஆர்வம் பெருக வந்துசேர்ந்து வேரற்ற மரம் போலே விழுந்து எழுந்திருக்கமாட்டாதே முசித்துக்கிடக்க, மாமுனிகள் வாரியெடுத்தணைத்து யோகக்ஷேம விசாரணை செய்தருளிப் போரவும் உபலாளித்தார்.

அப்போது திருவாய்மொழி ஈடு முப்பத்தாறுயிரப்படியில் •ஒன்றுந்தேவு ப்ரவேசம் காலக்ஷேபம் நடந்துகொண்டிருந்த ஸமயமாதலால் மாமுனிகள் தம்முடைய ஸகல சாஸ்த்ர ப்ராவீண்யமும் செவ்விதாக விளங்க கங்காப்ரவாஹம்போல் உபந்யஸித்தருளக் கேட்ட அண்ணன் "ஆழ்வார்கள் பதின்மரும் ஸ்ரீமந் நாதயாமுநயதிவராதிகளான ஆசார்யர்களனைவரும் ஒருங்கேதிரண்டு அவதரித்தபடியே இது!" என்று அறுதியிட்டு •ப்ரத்யக்ஷே குரவஃ ஸ்துத்யாஃ• என்கிற கணக்கிலே வாயாரத்துதித்து எழுந்து தெண்டனிட்டு "அடியேனையும் ஆட்கொண்டருளவேணும்'' என்று கைகூப்பிப் ப்ரார்த்திக்க, அதற்கு மாமுனிகள் சாடுக்தியாக "நீர் ப்ரதிவாதிபயங்கரர்; நாம் ஸாது; எங்ஙனே கூடுவது?'' என்று புன்முறுவலோடேயருளிச்செய்ய, உடனே அண்ணன் ஐயோவென்று அலமந்து தெண்டன் ஸமர்ப்பித்து, • ப்ரணீத்தஃ பரகோஷ்டீஷு பரவாதி பயங்கரஃ, ஸ்ரீவைஷ்ணவாநாம் கோஷ்டீஷு தந்நாம இதி விச்ருதஃ • என்று விண்ணப்பம் செய்து, 'இத் திருவடி ஸம்பந்தமல்லது பாவியேனுக்கு உய்வுபாயம் மற்றொன்றில்லை' என்று கண்ணீர் பெருக நின்று

ப்ரார்த்திக்க, மாமுனிகளும் இவருடைய ஆத்மகுண ஸம்பத்திக்கு அதிசயித்து இவருடைய பிரார்த்தனைக்குத் திருவுள்ளமுகந்து ஸகுடும்பராய் விவர்க்கு பஞ்ச ஸம்ஸ்காரங்களை ப்ரஸாதித்தருளி, ஸ்ரீவைஷ்ணவ தாஸன் என்று விலக்ஷணமான தாஸ்ய நாமத்தையும் ப்ரசாரப்படுத்தியருள அண்ணன் க்ருதார்த்தராய்,

"போதச்சிவந்து பரிமளம்வீசப் புதுக்கணித்த
சீதக்கமலத்தை நீரேறவோட்டிச் சிறந்தடியேன்
ஏதத்தைமாற்று மணவாளயோகி யினிமைதரும்
பாதக்கமலங்கள் கண்டேனெனக்குப் பயமில்லையே"

என்று விண்ணப்பஞ்செய்து இப்பாசுரத்தையே முதலாகக்கொண்ட 'அமலனுதிபிரான்' என்கிற பிரபந்தத்தை விஜ்ஞாபித்து அன்றுமுதல் மாமுனிகளின் திருவடிகட்கு அந்தரங்கராய் வர்த்தித்து ஸகல திவ்ய ப்ரபந்த ரஹஸ்ய வ்யாக்யானங்களையும் அதிகரித்துக்கொண்டு க்ருதார்த்தராயிருந்தார்.

## மாமுனிகளின் திவ்ய தேசயாத்திரை

ஆழ்வார் திருநகரி முதலான திவ்யதேசங்களேற வெழுந்தருளி மங்களாசாஸனம் செய்து வரவேணுமென்று அபிநிவேசங்கொண்ட மணவாள மாமுனிகள் நம் பெருமாள் திருவடிகளிலே நியமனம்பெற்றுப் புறப்பட்டுப் பயணகதியிலே ஆழ்வார் திருநகரியிற் சென்று சேர்ந்து அங்கே சிலகாலம் எழுந்தருளியிருந்து அடிபணிந்தார்க்கு அரும்பெரும் பொருள்களை அருளிச்செய்துகொண்டு வாழ்கிறவளவிலே, ஆசார்ய ஹ்ருதயத்தில் "ஜ்ஞாந சதுர்த்திகளின் மேலேயிறே ஆநந்த ஷஷ்டிகளுக்கு உதயம்" என்கிற சூர்ணைக்கு ஸ்வரஸமான பொருள் தெளியப் பெறவேணுமென்று ஆசையுண்டாக, திருநாராயணபுரத்திலே 'ஜநந்யாசார்யர்' என்று ப்ரஸித்தரான ஆய் என்னும் ஸ்வாமி பக்கலிலே கேட்டால் நன்கு தெளியலாம் என்று சில பெரியார் சொல்லக்கேட்டு அவ்விடத்தேற வெழுந்தருள்வதாக மநோரதித்திருந்தார்.

## திருநாராயணபுரத்து ஆய்பக்கலிலே அர்த்தம் கேட்டது

அவ்வளவிலே அந்த ஜநந்யாசார்யர் மாமுனிகளின் ப்ரபாவ விசேஷங்களைப் பரக்கக் கேட்டிருந்தவராகையாலே கோயிலிலே சென்று மாமுனிகளை ஸேவித்து வருவோமென்று புறப்பட்டு ஆழ்வார்

திருநகரியிலே மாமுனிகள் எழுந்தருளியிருக்கிறரென்பதறிந்து அங்கேற எழுந்தருள, அப்போதே இவரை ஸேவிப்பதற்காக மாமுனிகளும் திருநாராயணபுரம் நோக்கிப் புறப்பட்டு ஸ்வல்பதூரம் எழுந்தருளியாயிருக்க, இடையிலே இருவர்க்கும் யாத்ருச்சிகஸங்கதியுண்டாக, மாமுனிகளும் ஆய்பக்கலிலே தம்முடைய மநோரதத்தை விண்ணப்பஞ் செய்து ஆசார்ய ஹ்ருதயத்தின் அர்த்த விசேஷங்களைக் கேட்டு உவந்தார். அப்போது மாமுனிகளின் ஸர்வதோமுகமான வைதுஷ்ய விசேஷத்தைக் கண்டு விஸ்மயஸ்திமிதரான ஜநந்யாசார்யர்

"பூதூரில் வந்துதித்த புண்ணியனோ? பூங்கமழும்
தாதார் மகிழ்மார்பன் தானிவனோ?—தூதாய
வந்த நெடுமாலோ மணவாள மாமுனிவன்
எந்தையிவர் மூவரிலும் யார்?"

என்கிற வெண்பாவை யருளிச்செய்து மாமுனிகளை விலக்ஷணவதார வ்யக்தி விசேஷமாக எங்கும் ப்ரஸித்தப்படுத்திப் போந்தார்.

## மாமுனிகளின் மடத்தில் தீக்கொளுவுதலும் மாமுனிகளின் ப்ரபாவப்ரகாசமும்

மாமுனிகள் இங்ஙனம் திருக்குருகூரில் அகமகிழும் தொண்டர் வாழ அற்புதமாக ப்ரவசநம் செய்து போராநின்று கொண்டு அபரிமித சிஷ்யஸம்ருத்தியுடனே வாழ்ந்தருளுங்காலத்தில் இப்பெருமையைச் சிறிதும் பொறுக்ககில்லாத ஆசார்ய புருஷர்கள் சிலர் ஆஸுரமான துராலோசனையைச் செய்து மாமுனிகள் எழுந்தருளியிருக்கிற ஓலைமச்சான மடத்திலே நடுநிசியில் தீக்கொளுவினார்கள். அப்போது மாமுனிகள் தம்முடைய ப்ரபாவத்தாலே அவ்வழல் தட்டாதபடி திருவனந்தாழ்வான் வடிவெடுத்து வெளியேறி மடம் வேகிறபடியைக் கண்டு சோகித்திருக்கும் முதலிகள் திரளிலே வந்து புகுந்து நிற்க அந்த அத்புத சர்யையை முதலிகளெல்லாரும் அறிந்து வியந்து உகந்திருந்தார்கள்.

இங்ஙனே சிலத்ரோஹிகள் மடத்திலே தீக்கொளுவினார்களென்கிற செய்தியை அரசன் கேள்விப்பட்டு விசாரணைசெய்து அவர்களையெல்லாம் தண்டிக்க நினைத்திருக்கிற வளவிலே, • மாதர் மைதிலி ராக்ஷஸீஸ் த்வயி ததைவார்த்ராபராதாஸ் த்வயா ரக்ஷந்த்யா பவநாத்

மஜாத் லகுதரா ராமஸ்ய கோஷ்டீ க்ருதா: இத்யாதி ஸ்ரீஸூக்திகளை அநவரதம் அநுஸந்தித்தும் கொண்டும் கேட்பார் மனங்கரைய வுரைத்துக் கொண்டும் போருகிற நாம் இந்த ஸ்ரீவைஷ்ணவர்களை தண்டனைக்கோ ஆளாக்குவது: என்று துடித்து மாமுனிகள் அவர்கள் குற்றமற்றவர்களென்றும் தண்டிக்கத் தகாதவர்களென்றும் அரசனுக்கு அறிவித்து அவர்களைக் காத்தருளியதுமன்றியில் அவர்கள் திறத்திலும் விசேஷ கடாக்ஷம் செய்தருளி அவர்களும் திருவடி பணிந்து உய்ந்துபோமாறு திருவுள்ளமுவந்தருளினர். கூரத்தாழ்வானிலும் விஞ்சின இம்மஹா குணத்தைக்கண்டு அனைவரும் சாலவியந்தார்கள்.

## திருக்குருகூர் முதலானவிடங்களில் திருப்பணிகள் செய்வித்தல்

அந்த நாட்டுக்கு அதிபதியாயிருப்பானொரு மஹாப்ரபு மாமுனிகளின் வைபவாதிசயங்களை யெல்லாம் கேட்டும் கண்டும் மிகவும் ஈடுபாடுற்றுத் திருவடிகளிலே வந்து ஸகுடும்பனாய் ஆச்ரயித்திருந்து, 'ஸ்ரீ சடகோபதாஸன்' என்று நாமமிடப்பெற்று, அருளிச்செய்யும் நல்வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருந்து, 'அடியேனுக்கு ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யங்களை நியமித்தருளவேணும்' என்று பிரார்த்தித்து, அங்ஙனமேநியமனம் பெற்றுப் பொலிந்துநின்றபிரான் திருவுள்ளத்துக்கும் நம்மாழ்வார் திருவுள்ளத்துக்கும் உகப்பாகப் பலபல திருமண்டபத் திருப்பணிகளை நடத்திவைத்தான். காளமேகன் திருமண்டபம், அழகிய மணவாளன் திருமண்டபம் என வழங்கப்பெற்றுவரும் திருமண்டபங்களெல்லாம் அவ்வரசனுடைய திருப்பணிகளென்பர். இங்ஙனமே திருக்குறுங்குடியிலும் திருவேங்கடமுடையானென்னொரு பரமபாகவதனை விசேஷ கடாக்ஷத்திற்கு இலக்காக்கியருளி அவனைக்கொண்டு அங்கே பல திருப்பணிகள் செய்வித்து மற்றுமுள்ள பாண்டிநாட்டுத் திருப்பதிகளிலும் இங்ஙனே சிலகாலம் வாழ்ந்திருந்து ஆங்காங்கு அபிமானிகளைக் கற்பித்தருளித் திருப்பணிகளும் நித்ய மங்களாசாஸனமும் குறையற நடக்குமாறு செய்தருளினர். ... ... ....

## மாமுனிகள் திருவரங்கம் சென்று சேர்தல்

இங்ஙனம் பாண்டிநாட்டுத் திருப்பதிகள்தோறும் வாழ்ந்து ஆங்காங்கு அடிபணிந்தார்க்கு அர்த்த விசேஷங்களை ப்ரஸாதித்தருளி,

கைங்கர்யத்திற்குக் கடவர்களையும் கடாக்ஷித்தருளி அத்தலத்தெம் பெருமான்களுக்குச் சீரும் சிறப்பும் தழைத்தோங்கும்படி செய்தருளி • ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம் • என்கிற மங்களா சாஸனத்தை அதிசயிப்பித்து • அரங்கத் தரவினணையான் கோலமாமணி யாரமும் முத்துத்தாமமும் முடிவில்லதோ ரெழில் நீலமேனியின் ஸேவையை நெடுங்காலம் விட்டுப் பிரிந்திருக்ககில்லாமையினாலே விரைந்து திருவரங்கம் பெரியகோயிலேற வந்து சேர்ந்தாராயிற்று.

## எறும்பியப்பா வந்து பணிதல்

திருக்கடிகைக்கு அருகிலுள்ள எறும்பியென்னும் அக்ரஹாரத்திலே தோன்றி எறும்பியப்பா என்று ப்ரஸித்தராய் வித்வானாயிருந்த தேவ ராஜாசார்யர் கோயிலில் நம் பெருமாளை ஸேவிக்க விடைகொண்டு அங்கே அண்ணன் திருமாளிகையில் தங்கியிருக்கையில் அவ்வண்ண னோடுகூட மாமுனிகளின் காலக்ஷேப கோஷ்டியிலும் அந்வயிக்கப் பாக்யம் பெற்றார்; அப்போது மாமுனிகளின் ஸர்வதோமுகமான ப்ரஜ்ஞா விசேஷத்தைக் கண்டு களித்தும் அவர் திருவடிகளில் ஆச்ரயிக்க பாக்யபரிபாகம் விளையாமையாலே மாமுனிகள்பாடே தீர்த்த ப்ரஸாதங்களும் பெறுமலே தம்முடைய ஊருக்குத் திரும்பிவிட்டார்.

அங்கே நித்யகர்மாநுஷ்டானங்களை நிறைவேற்றிக்கொண்டு பெருமாளுக்குத் திருவாராதனம் கண்டருளப்பண்ணப் புகுந்து தம் திருவாராதனமான சக்ரவர்த்தி திருமகன் ஸன்னிதியிலே தெண்டன் ஸமர்ப்பித்து • கௌஸல்யாஸுப்ரஜா ராம! • என்று அநுஸந்தித்துக் கொண்டே கோயிலாழ்வார் திருக்காப்பு நீக்கப்புகத் திருக்காப்பு திறக்கப் பெற்றதில்லை; பின்பு பலவாறு உபாயங்கள் செய்து பார்த்தும் ஒருபடி யாலும் திறக்கப்போகாமையாலே பரம துக்க பர்யாகுலராய் அமுது செய்யாமலே 'இது என்ன அபசார பலனோ!' என்று மனம் நொந்து மூசித்துக்கிடந்தார். அன்றிரவில் அவருடைய கனவில் சக்ரவர்த்தி திருமகன் ஸேவைதந்தருளி "நமக்கு ஆருயிராய் உலகுக்கு ஓருயிரான மணவாளமாமுனிகளின் திருவடிகளிலே ஆச்ரயியாதே மீண்டு வந்தீரா கையாலே உமக்கு நாம் கதவுதிறந்திலோம்; திருவனந்தாழ்வான்றானே அவராக வந்து அவதரித்ததமை அறிவீராக; அவர் திருவடிகளில் சென்று ஆச்ரயித்துத் தூய்மைபெற்று வந்தாலன்றி உமது கையால் நாம் திருவாராதனம் கொள்ளக்கடவோமல்லோம்; சடக்கெனப்போகீர்"

என்று நியமித்தருள, அப்பாவும் துயிலெழுந்து விஸ்மிதராய் இவ்வதிசயத்தை அன்பர்களுக்கு அறிவித்து அப்போதே புறப்பட்டுப் பயணகதியிலே நம்பெருமாள் ஸந்நிதி சென்று சேர்ந்தார்.

அப்போது மணவாளமாமுனிகள், ஸன்னிதிக்குச் சென்று மங்களாசாஸனம் செய்தருளப் புறப்படும் அவஸரமாயிருந்தது. அப்பாவும் அவ்விடத்திலே மாமுனிகளைத் திருவடி தொழுது அவருடைய விசேஷ கடாக்ஷத்திற்குப் பாத்ரபூதராகி, க்ரமேண தம்முடைய இல்லத்தில் நடந்த செய்திகளை யெல்லாம் விண்ணப்பஞ்செய்து, வேரற்ற மரம் போலே திருவடிகளிலே விழுந்து அபராத க்ஷாமணம் செய்துகொண்டு 'இனி அடியேனுக்கு இத்திருவடி நிழலொழியப் புகலிடம் வேறொன்றில்லை; •நெறிகாட்டி நீக்கப்பாராதே அத்தாணிச் சேவகத்திற்கு ஆட்படுத்திக் கொண்டருளவேணும்' என்று மிகவும் பிரார்த்தித்து மாமுனிகளின் நிரவக்ரஹமான அநுக்ரஹத்தைப் பெற்றுத் திருவிலச்சினையும் பெற்று, அன்று தொடங்கி ஸகலார்த்தங்களும் சிக்ஷிக்கப்பெற்றுக் கிருதார்த்தரானார்.

இவர் பரமபக்தி பரிவாஹரூபமாக மணவாளமாமுனிகள் விஷயமான காவ்யநாடக சம்பூ ஸ்தோத்ரங்கள் முதலியன பலவும் பணித்தார். நாளடைவில் இங்ஙனே பலபல மஹான்கள் அடிபணிந்து அறியாதன வறிவிக்கப்பெற்று க்ருதார்த்தராய் உஜ்ஜீவித்துப் போருவார்களாயிருந்தனர்.

## அரங்கேசன் திருமுன்பே ஈடு அருளிச்செய்தல்

மணவாளமாமுனிகள் இங்ஙனம் அப்ரதிமவைபவம் பொலிய சிஷ்ய ஸம்பத்துடனே வாழ்ந்தருளுங் காலத்திலே ஒருநாள் ஸ்ரீரங்கநாதன் மாமுனிகளுக்கு அருளப்பாடிட்டு 'ஜீயரே! நாளை முதலாக நம்முடைய பெரியதிருமண்டபத்திலே நம்மாழ்வாருடைய திருவாய்மொழியை ஈடு முப்பத்தாறாயிரம் முதலான வியாக்கியானங்களுடனே ப்ரவசனம் செய்து போரீர்' என்று நியமனம் ஸாதிக்க, மாமுனிகள் மஹாப்ரஸாதமென்று உகந்து அப்படியே மறுநாள் தொடங்கி, 'கங்காப்ரவாஹமோ? அல்லது கங்கையிற் புனிதமாய காவிரிப்பெருக்கோ?' என்னலாம்படியாக மிக அற்புதமாய்த் தம்முடைய விசதவாச்சிகாமணித்வத்தை நன்கு நிலைநாட்டிக்கொண்டு ப்ரவசனம் செய்தருளத் தொடங்கினர்.

அப்போது பெருமானும் நாச்சிமாருடனே கூட திவ்ய ஸிம்ஹாஸனத்திலமர்ந்து, அர்ச்சேர்த்தியை அநுபவிக்கிற அயர்வறுமமரர்களான திருவனந்தாழ்வான், பெரியதிருவடி, ஸ்ரீ ஸேனாபதியாழ்வானுகிற நித்யஸூரிகளோடும், வைகுந்தத்து முனிவரான நம்மாழ்வார் தொடக்கமான ஆழ்வார்கள் பதின்மரோடும் * அணியரங்கன் திருமுற்றத்தடியாரோடுங் கூடப் பேரோலக்கமாக விருந்து "ரங்கீ வத்ஸர மேகமேவம் அச்ருணோத்" என்னும்படியே ஒரு ஸம்வத்ஸரமளவும் ப்ரஹ்மோத்ஸவாதிகளுள்பட ஸகலோத்ஸவங்களையும் நிறுத்தித் திருச்செவிசார்த்தும்படியாயிற்று.

இங்ஙனம் ஒரு ஸம்வத்ஸரகாலம் இடையூறென்றுமின்றி இனிதாக நடைபெற்றுக் காலக்ஷேபம் தலைக்கட்டியருளும் நாளொன்று நேர்ந்தது. அன்று அழகியமணவாளன் திருவுள்ளத்திலே ஒரு தோற்றம் பிறந்தது. அதாவது— நாம் விபவாவதாரங்களிலே சில பெரியார்களிடத்தில் பணிந்திருக்கப்பெற்றும் அங்கே ஆசார்ய குணபூர்த்தி யில்லாமையாலே நெஞ்சு குறையுற்றுத் தளும்பியேகிடக்க நேர்ந்தது; அக்குறையெல்லாம் தீர இப்போது இந்த ஸதாசார்யப் பேறு நமக்கு வாய்த்தது மஹத்தான விசேஷமே; இங்ஙனம் நமக்கு நேர்ந்த மஹாபாக்யம் நீடூழிகாலம் இந்நிலவுலகத்தில் நிலவும்படி இந்த ஸதாசார்ய விஷயத்திலே ஒரு கிஞ்சித்காரம் செய்யப்பெற்றோமாக வேணும்; இந்த ஆசார்ய சிகாமணிக்கு ஒரு சிறந்த தனியனிட்டு அதைத் திருவோலக்கத்திலே விண்ணப்பஞ்செய்து அதுதனக்கு உலகம் நிறைந்த புகழுண்டாம்படி செய்வோம்' என்கிற திருவுள்ளம் உண்டாயிற்று,

வஸ்துத: * பத்யம் அந்தேவாஸிந: * இத்யாதி ப்ரமாண கதியின்படி தனியன் அநுஸந்திக்கை சிஷ்ய க்ருத்யங்களில் தலையானதாகையாலும், ஸ்ரீரங்கநாதன் மாமுனிகள்பாடே தான் வஹித்த சிஷ்யபாவத்தைத் தேசமெல்லாமறியச்செய்ய விரும்பினபடியாலும் இங்ஙனே திருவுள்ளம் தோன்றியது சாலப்பொருந்தும்.

ஸ்ரீசைலேசத் தியமந்திரம் திருவவதரித்தல்

அன்றைக் காலக்ஷேபக் கோஷ்டியில் "அவாவிலந்தாதி யிப்பத்தறிந்தார் பிறந்தாருயர்ந்தே" என்னுமளவாக வியாக்கியானத்தை

நிர்வஹித்தருளி, மேலே சீரும் சிறப்பும் நடைபெறுத்த வேண்டிய அவஸரம் ப்ராப்தமாகையில்

[அழகிய மணவாளன் நாலைந்து பிராயம் வாய்ந்த அர்ச்சக குமாரனை கோலம்பூண்டு கனவேகமாகக் கோஷ்டியிடையிலே வந்து, அவரவர்கள் விலக்கினதையும் லக்ஷியம் பண்ணுமே புகுந்து கைகூப்பி நின்று]

*ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம், யதீந்த்ர ப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் * என்கிற தனியனை விண்ணப்பஞ்செய்து மறைய, இவ்வதிசயத்தை நோக்கி அனைவரும் வியந்தனர்.

இங்ஙனம் தெய்வவாக்காகத் திருவவதரித்ததாய்ச் சிறந்த மந்திர மென்று போற்றப்படுமதான இத்தனியனை பகவதாஜ்ஞையின்படி சிஷ்யவர்க்கங்கள் பட்டோலை கொண்டு மஞ்சட்காப்பு சாத்தி * அரவணைத்துயிலும் கடல்நிறக்கடவுளெந்தையின் திருவடிவாரத்திலே ஸமர்ப்பித்தெடுத்துத் தட்டிலே வைத்துச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். வேதத்திற்கு ப்ரணவம்போலே த்ராவிடவேதாநுஸந்தானத்திற்கு இத்திருமந்திரமே முதலும் முடிவுமாகக் கடவதென்று பெருமாளுடைய நியமனமும் பாங்காக வாய்த்தது.

பின்பு சிஷ்யர்களால் * வாழி திருவாய்மொழிப்பிள்ளை மாதகவால் வாழும்* என்று தொடங்கி வாழித்திருநாமம் அரங்கநாத னாணையின்படி பணிக்கப்பட்டு, அதனை யநுஸந்தித்தே எங்கும் அருளிச்செயல் ஸேவை தலைக்கட்டுகவென்று நியமனமும் அவதரித்ததாயிற்று.

பிறகு மாமுனிகளை அழகியமணவாளன் அருகிலழைத்து அநவதிகமான சிறப்புகளைத் தந்தருளி, கோயிலனைத்துக்கொத்தும் ஸகல வரிசைகளுடனும் திருவீதி வலமாக (மாமுனிகளை) மடத்திலே எழுந்தருளப் பண்ணுவித்து * க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ * என்கிற கணக்கிலே உள்ளம் பூரித்து க்ருதார்த்தனாய் விளங்கினன்.

## மாமுனிகள் திவ்யஸூக்திகளருளிச் செய்தல்

ஏற்கெனவே அவதரித்துள்ள பூர்வாசார்ய திவ்யஸூக்திகளை ப்ரவசனம் செய்தருள்வதிலேயே மிகுந்த அபிநிவேசமுடையரான மாமுனிகள் ஸ்வதந்த்ரமாகச் சில க்ரந்தங்கள் இட்டருளத் திருவுள்ள முடையவரல்லரேயாகிலும், இவ்வுலகின் பாக்ய பரிபாக மடியாக சிஷ்யர்களின் ப்ரார்த்தனைக்கிணங்கியும் பகவந் நியமனத்தை முன்னிட்

டும் *தேனே பாலே கன்னலே யமுதேயான பல திவ்யக்ரந்தங்களையும் அருளிச்செய்தருளும்படியாயிற்று.

அவற்றின் விவரணம் வருமாறு:—பிள்ளை லோகாசார்ய ரருளிச் செய்த ரஹஸ்யங்களில் ஸ்ரீவசநபூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி என்கிற மூன்று ரஹஸ்யக்ரந்தங்கள் மிகச் சிறந்தவைகளும் ப்ரதானங் களுமாகையாலே அம்மூன்றுக்கும் வியாக்கியானமிட்டருளினர்.

பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் அருளிச்செய்த ஆசார்ய ஹ்ருதயமென்னும் ரஹஸ்ய ரத்னத்திற்கு வியாக்கியான மிட்டருளினர்.

பெரியவாச்சான் பிள்ளை நாலாயிரத்திற்கும் பூர்த்தியாக வியாக்கி யானமருளிச் செய்திருந்தும் அதில் பெரியாழ்வார் திருமொழி முதற் பாசுரம் தொடங்கி "வாக்குத் தூய்மையிலாமையினாலே மாதவா வுன்னை" (5—1—1) என்கிற வளவும் வியாக்கியானம் கரையானுக்கு இரையாகி துர்லபமாய் விட்டபடியாலே அவ்வளவுக்குத் தாம் வியாக்கி யானமிட்டருளினர். அந்த வியாக்கியானத்தை மஹான்கள் ஸேவித்து "அந்தோ! நாலாயிர வியாக்கியானமும் கரையானுக்கு இரையாகி யிருந்தால் நலமாயிருக்குமே; இங்ஙனே தேனும் பாலுமமுது மன்ன வியாக்கியானத்தை மாமுனிகள் பூர்த்தியாக இட்டருளும்படியான பாக்கியம் நேர்ந்திருக்குமே' என்று பரஸ்பரம் வியந்து உவந்து பேசிக் கொண்டார்கள். இராமாநுச நூற்றந்தாதிக்கு உரைசெய்தருளினர்.

அருளாளப்பெருமா ளெம்பெருமானாரருளிச்செய்த ஞானசாரப் பிரமேயசாரங்களுக்கு ப்ரமாண யோஜனை செய்தருளினர். கீதைக்குத் † தாத்பர்யதீபமென்றொரு வியாக்கியானம் இட்டருளினர். ஈடு முப்பத்

† யதீந்த்ரப்ரவண ப்ரபாவத்தில் 'கீதைக்குத் தாத்பர்ய தீப மென்றொரு வியாக்கியானமிட்டருளி" என்றுள்ளது. சில ஆண்டுகட்குமுன் காஞ்சீ ஸுதர்சன அச்சுக்கூடத்தில் தேவநாகரலிபியில் மாமுனிகளருளிச் செய்ததாக ஒரு வியாக்கி யானம் அச்சிடப்பட்டிருக்கிறது. இந்த வியாக்கியானம் மாமுனிகளருளிச்செய்தது தானென்று அதில் விரிவான பூமிகையும் (அஸ்மதாசார்ய பாதரால்) வெளியிடப் பட்டிராநின்றது. இருந்தாலும் அதைப்பற்றி ஆராய்ச்சி செய்தகாலத்தில் அது மாமுனிகளருளிச் செய்ததன்றென்றும் மாமுனிகளுக்குப் பிற்பட்டவரான அபிராம வராசார்யரென்கிற வொருவரால் பணிக்கப்பட்டதென்றும் தேறிற்று. அதீந்த்ரிய மான விஷயத்தில் சிறியேனாகிய அடியேன் நிர்ணயித்துக்கூற அநதிகாரி. மாமுனிகளருளிச்செய்த கீதாதாத்பர்யதீபம் இப்போது கிடைக்கவில்லை யென்க,

தாருயிரப்படிக்கும் தாமருளிச்செய்த ரஹஸ்ய வ்யாக்கியானங்களுக்கும் பிரமாணத்திரட்டுகள் ஸங்க்ரஹித்தருளினார். திருவாராதன ப்ரயோகமொன்று திருவாய்மலர்ந்தருளினார். உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி என மூன்று தமிழ்ப் பிரபந்தங்களருளிச்செய்தார். [தேவராஜமங்களமும் யதிராஜ விம்சதியுமருளிச்செய்தமை கீழே நிரூபிக்கப்பட்டது] மற்றும் ஸ்ரீஸூக்தி விசேஷங்களுண்டாகில் கண்டுகொள்வது.

## மாமுனிகளின் ஸ்ரீஸூக்திப் பெருமை

உலகில் ஸ்ரீஸூக்திகளருளிச் செய்தவர்கள் பல ஆசார்யர்களுமுண்டு. எனினும், மணவாள மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளின் மாதுர்யமும் காம்பீர்யமும் அர்த்தபுஷ்டியும், ரஸபுஷ்டியும் அநிதர ஸாதாரணமாகவேயிருக்கும். *நாமூலம் லிக்யதே கிஞ்சித் நாநபேக்ஷித முச்யதே* என்னும்படி யமைந்த வியாக்கியானம் மாமுனிகளுடையதேயாம். வேறு எந்த ஆசிரியரும் இங்ஙனே வியாக்கியானம் அமைக்கக் கற்றிலர் என்றால் இது அதிசயோக்தியேயாகாது. பல மதாந்தரங்களைக் கண்டித்து எழுதினாலுங்கூட ஒருவருடைய மனமும் நோகாதபடிக்கும் வ்யர்த்த தூஷண பரிஹாஸங்களைச் சிறிதும் புகவிடாதபடிக்கும், எந்த இடத்தையெடுத்தாலும் சாஸ்த்ரார்த்தமே கைகொள் கனியாம்படிக்கும் 'ஸகல சாஸ்த்ர ஸாகர பாரங்கதர் இவரொருவரே' என்று திண்ணமாக எண்ணும்படிக்கும், அநந்வயம் க்லிஷ்டாந்வயம், மயங்கவைத்தல் முதலிய தோஷங்களுக்குச் சிறிதும் இடமில்லாதபடிக்கும் ஸ்ரீஸூக்திகளருளிச்செய்தவர் மாமுனிகளொருவரேயாவர். ஸூத்ரம்போன்ற ஸ்ரீ லோகாசார்ய திவ்யஸூக்திகளுக்கு அவதாரிகையிடுகிற அழகும் மூலத்திற்கு அர்த்தமருளிச்செய்கிற வைகரியும், ஆங்காங்கு அர்த்தங்களைப் பிண்டீகரித்து நிகமித்தருளுகிற அற்புதமும் *உள்ளுந்தோறு மென்னெஞ்சு நீராய் நெகிழ்கொக்கும்.

வஸ்துதः இவ்வாசிரியருடைய ஸ்ரீஸூக்திகளை ஸேவித்தபின்பு இன்னொரு வாக்கில் வாயை வைத்தால் *ஸ்திதேரவிந்தே மகரந்த நிர்ப்பரே மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே* என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்திக்கு விருத்தமாகச் செய்கிறோமென்கிற எண்ணமுண்டாகிறதேயன்றி வேறில்லை. பல சொல்லியென்? மற்றையோருடைய நூல்களைக் காணும்போது அவரவர்களுடைய ஞானத்தை அளவிட்டு அறியும்படியாக

வுள்ளது; மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்களை ஸேவிக்குமளவில், திருவடியைப்பற்றிப் பெருமாளருளிச்செய்த திருவாக்கே நினைவுக்கு வருகின்றது, "நாந்ருக் வேதவிநீதஸ்ய நாயஜுர் வேததாரிண:, நாஸாமவேதவிதுஷ: சக்யமேவம் ப்ரபாஷிதும், நூநம் வ்யாகரணம் க்ருத்ஸ்நம் அநேந பஹுதாச்ருதம். பஹுவ்யாஹரதாநேந நகிஞ்சிதபசப்திதம்" இத்யாதி வால்மீகி வாக்கும், "இல்லாத வுலகத்தெங்கு மீங்கிவனிசைகள் கூரக், கல்லாத கலையும் வேதக்கடலுமேயென்னுங் காட்சி, சொல்லாலே தோன்றிற்றன்றே ஆர் கொலிச் சொல்லில் வல்லான்? வில்லார் தோளிளைய வீர! விரிஞ்சனோ விடைவலானோ? என்ற கம்பர் வாக்கும் உண்மையில் மாமுனிகள் விஷயத்திலேதான் பொருந்தக் காணலாமென்பது அநஸூயுக்களின் அநவத்ய ஸித்தாந்தம்.

## அஷ்டதிக்கஜ சிஷ்யவர்க்கம்

மாமுனிகளின் திருவடிகளிலே பல்லாயிரவர் ஆச்ரயித்து உய்ந்தார்களெனினும் ப்ரதாந பரிகணிதர்களான சிஷ்யர்கள் அஷ்டதிக்கஜங்களென்று ப்ரஸித்தர்.

| | |
|---|---|
| வானமாமலை ஜீயர் | பிரதிவாதிபயங்கர மண்ணன் |
| பட்டர்பிரான் ஜீயர் | எறும்பியப்பா |
| திருவேங்கடராமாநுஜ ஜீயர் | அப்பிள்ளை |
| கோயிலண்ணன் | அப்பிள்ளார் |

என்று மூன்று ஜீயர்களும், ஐந்து க்ருஹஸ்தர்களும்

## வைபவ நிகமநம்

எம்பெருமானார் வைபவம்போலே மாமுனிகளின் வைபவமும் மாகடல் போன்றதே; பக்தர்கள் அநுஸந்திக்க இவ்வளவே போதுமென்று ஸம்க்ஷேபித்தபடி. "அடியார்கள் வாழ அரங்கநகர் வாழச் சடகோபன் தண்டமிழ் நூல் வாழக் கடல்சூழ்ந்த மன்னுலகம் வாழ மணவாளமாமுனியே! இன்னுமொரு நூற்றாண்டிரும்" என்று அந்நாள் தொடங்கிக் காருள்ளளவும் கடல் நீருள்ளளவும் வேதமுள்ளளவும் வேதகீதனுள்ளளவும் முச்சந்தியும் மூவுலகும் வாழ்த்தியே நிற்கும்படியான வாய்ப்பு விளைந்திருக்கையினால் இவ்வாசிரியரின் பரமபத யாத்ரா வ்ருத்தாந்தம் முதலியவற்றை எழுதாது நிறுத்திக்கொண்டபடி.

மாமுனிகள் இவ்விபூதியிலேயே நித்ய ஸ்ரீநித்ய மங்களமாக ஸேவை ஸாதிப்பதான அத்யவஸாயம் அடியேனுக்குத் திண்மை பெற்றுள்ளது.

நம்மாழ்வார் தம்முடைய பெருமையை "துவளில் மாமணி மாடம்" "உண்ணுஞ் சோறு பருகுநீர்" முதலான திருவாய்மொழிகளில் தாமே வெளியிட்டுக் கொண்டவாறுபோல, மாமுனிகளும் ஆர்த்திப் பிரபந்தத்தில் ஒரு பாசுரத்தினால் தமது பெருமைகளைத் தாமே அருளிச் செய்யும்படியாயிற்று. எதற்காக? நம்போல்வார் அநுதினமும் அநுஸந்தித்து உய்வதற்காக; அந்தப் பாசுரமே பக்தர்களுக்கு நித்யாநுஸந்தேயமாகக் கடவது; அதாவது:—

"தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப் பெற்றோம்
தேவனுறை திருப்பதியே யிருப்பாகப் பெற்றோம்
மன்னியசீர்மாறன் கலையுணவாகப் பெற்றோம்
மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்
முன்னவராம் நம்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம்
முழுது நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்
பின்னையொன்று தனினெஞ்சு பேராமற் பெற்றோம்
பிறர்மினுக்கம் பொறாமையிலாப் பெருமையும் பெற்றோமே"

மணவாளமாமுனிகளின் முக்கியமான வைபவங்களெல்லாம் இப்பாசுரத்தில் அடங்கியுள்ளனவென்று கண்டுகொள்வது............

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியரெழுதிய
மணவாள மாமுனிகள் வைபவம்
முற்றுப்பெற்றது.

ஸ்ரீ:

# ஸ்ரீலோகாசார்ய வேதாந்தாசார்ய ஸிந்தாந்த ஸாமரஸ்யம்

அத்வைதிகளின் கொள்கைக்கும் விசிஷ்டாத்வைதிகளின் கொள்கைக்கும் பலவிஷயங்களில் வேற்றுமையிருந்தாலும் நம்மவர்களால் முக்கியமாக ஒரே ஒரு விஷயந்தான் வாதிவிஜயத்திற்கு உயிராகக் கொள்ளப்படுகிறது ஸகல சேதநாசேதநங்களுக்கும் ஸர்வேச்வரனுக்கும் உள்ள ஸம்பந்தம் சரீராத்மபாவம் என்பதேயாம். இதனை உள்ளபடி உணரப்பெற்றார்க்கு ஸகல வேதாந்தவாக்யங்களும் ஒருவிரோதமுமின்றியே ஸமரஸமாக அந்வயிக்கப் பெறுமென்றும், இதுகொண்டே ஸகலவாதிகளையும் எளிதாக வென்றுவிட முடியுமென்றும் வேதாந்த தேசிகன் உறுதியாக உரைத்தருளுகிறார். *யத்யேதம் யதிஸார்வபௌம கதிதம் வித்யாத் அவித்யாதம: ப்ரத்யூஷம் ப்ரதிதந்த்ரம் அந்திமயுகே கச்சித் விபச்சித்தம:, தத்ரைகத்ர ஜடித்யுபைதி விலயம் தத்தந்மதஸ்தாபநா ஹேவாகப்ரதமாநஹைதுககதா கல்லோல கோலாஹல:* என்பது (ரஹஸ்யத்ரயஸாரத்தில்) தேசிகனுடைய திவ்ய ஸூக்தி. இந்த சரீராத்மபாவத்திற்கு ப்ரதானப்ரதிதந்த்ர மென்று பெயரிடப்பட்டிருக்கின்றது.

வேதாந்தங்களில் *ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ் ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ் ஸ்வராட்* என்றும் *ததேவாக்நிஸ் தத் வாயுஸ் தத் ஸூர்யஸ் தது சந்த்ரமா:* என்று மிவ்வாறாகப் பலவாக்யங்களும், *பூத்தண்டுழாய் முடியாய் புனைகொன்றையஞ் செஞ்சடையாய் வாய்த்த வென்னான் முகனே!* என்றும், *நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய், சீரார்சுடர்களிரண்டாய் சிவனாயயனாய்* என்று மிவ்வாறாகப் பல பாசுரங்களும் உண்டாக்குகின்ற மருளை அவலீலையாகப் போக்குவதற்கு சரீராத்ம பாவமென்கிற ப்ரதாநப்ரதிதந்த்ரத்தின் தெளிவான உணர்ச்சியொன்றே பர்யாப்தமென்பதை உபயவேதாந்த நிர்வாஹர்கள் நன்கறிவர்கள். ஆக, சரீராத்மபாவ ஜ்ஞானமே வேதாந்திகளுக்குத் தலையானதென்று தேறிற்று. இதை வேதாந்தத் திறவுகோல் என்று கொள்க.

இவ்வண்ணமாகவே ரஹஸ்யார்த்த நிர்வாஹத்திற்கும் ஒரு திறவுகோலுள்ளது. ஸர்வேச்வரனைப் பெறுவது சேதநனுக்குப் பேறா?

சேதநனைப் பெறுவது ஸர்வேச்வரனுக்குப் பேறு? என்னும் விசாரணை யில் 'சேதநனைப் பெறுவதுதான் ஸர்வேச்வரனுக்குப் பேறு' என்று நிஷ் கர்ஷிப்பதுண்டே, இதுதான் அந்தத் திறவுகோலாம். எம்பெருமா னுடைய க்ருபை ஸஹேதுகமா? நிர்ஹேதுகமா? ப்ரபத்தி உபாயமா? அதிகாரி விசேஷணமா? இத்யாதி விசாரங்களைத் தனிப்படச் செய்ய வேண்டிய ஆவச்யகதையில்லை; "சேதநனைப் பெறுவது ஈச்வரனுக்குத் தான் புருஷார்த்தம்" என்று நிராபாதமாகத் தேறிவிட்டால் பகவத் க்ருபா நிர்ஹேதுகத்வமும் ப்ரபத்த்யநுபாயத்வமும் மற்றும் தன்னடையே தேறிற்றாகும். இம்மூன்று விஷயங்களிலும் ஸ்ரீலோகாசார்யாதிகளின் ஸித்தாந்தம் வேறென்றும் ஸ்ரீமத் வேதாந்ததேசிகனுடைய ஸித்தாந்தம் வேறென்றும் இக்காலத்து ஒருவகுப்பினர் (இரண்டொரு நூற்றாண்டாக) ப்ரசாரம் செய்யத் தலைப்பட்டனர். இஃது உண்மைக்கு மிகவும் மாறானது, அடியேனுடைய நூல்களில் நவீனர்களென்று பெயரிடப் பெற்றவர்களின் கொள்கையாம் இவை. இவற்றை தேசிகனுடைய ஸித்தாந்தமாகக் கூறுவதற்கு அணுமாத்ரமும் அவகாசமில்லை. இதை நாம் ஒருதலையாக நின்று உபபாதிப்பதன்றிக்கே தேசிக திவ்யஸூக்தி களைக் கொண்டே உபபாதிக்கக்கடவோம். இந்த உபபாதனம் இன்றாகச் செய்வதன்று. நமது பலநூல்களில் ஏறியுள்ளதே இது. இந்த ஸந்தர்ப்பத்தில் ஸாரமாகவும் ஸம்க்ஷேபமாகவும் உணர்த்துகிற படி. ஸ்ரீலோகாசார்ய ஸித்தாந்தமிது என்பதில் நவீனர்களுக்கும் விஸம்வாதமில்லாமையாலே அவ்வாசார்யருடைய ஸ்ரீஸூக்திகளை யெடுத்துக்காட்டி நூல்விரிவு செய்ய நினைக்கின்றிலோம். ஸ்ரீதேசிக திவ்யஸூக்திகளையும், அவற்றுக்கு மூலமான ஸர்வஸம்ப்ரதிபந்ந ப்ரமாணங்களையுமே காட்டி, தேசிகஸூக்திகளுக்கும் நவீனர்களின் கொள்கைகளுக்கும் ஸம்பந்தகந்தமும் கிடையாதென்பது மூதலிக்கப் படுகிறது.

## ஸ்வகதஸ்வீகார பரகதஸ்வீகாரங்கள்

த்வயமென்கிற மந்த்ரரத்னத்தின் சரீரம் * ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே * என்று எம்பெருமான் திருவடிகளை நாம் பற்றுவதாகவுள்ளது. இதை யடியொற்றி *புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே * என்றும் * அகிஞ்சந: அநந்யகதிச் சரண்ய! த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே * என்றும் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் அருளிச்செய்யக் காண்கிறோம். சில பாசுரங்களையோ,

சுலோகங்களையோ விசிஷ்ய எடுத்துக்காட்டவேணுமோ? யாரும் எம்பெருமானைத் தாம் ஸ்வீகரிப்பதாகப் பேசுவது காண்கிறோமேயொழிய வேறுவிதமாகக் காண்பதில்லை; ஆகவே ஸ்வகதஸ்வீகார மென்பதுண்டேயல்லது பரகதஸ்வீகாரமென்று ஒன்றிருப்பதாகச்சொல்லுவதான்னது அஸங்கதமான வார்த்தை—என்பர் நவீனர்.

இந்த விஷயத்தில் தெளிவு எப்போது பிறக்குமென்றால், நம்மைப் பெறுவது எம்பெருமானுக்குப் பேறு? எம்பெருமானைப் பெறுவது நமக்குப் பேறு? என்று விசாரித்து முடிவுகட்டும்போதுதான் பிறக்கும். தேசிகன் தாம் அவதரித்தவிடமாகிய திருத்தண்காவில் ஸேவைஸாதிக்கின்ற விளக்கொளியெம்பெருமானுக்கு இட்டருளின ஸ்தோத்ரத்திற்கு சரணாகதி தீபிகை யென்று பெயர். இது மற்ற ஸ்துதிநூல்களைப் போலல்லாமல் தத்வார்த்த ஸாரங்களை வெளியிடுதற்கென்றே இயற்றப்பட்டதென்பது தோன்றவே சரணாகதி தீபிகையென்று நாமகரணம் செய்தார். தீபப்ரகாசனுக்கும் தீபிகை காட்டினபடி. இதில் பதினொன்காவது சுலோகத்தில் ஸகல சாஸ்த்ரஸாரப் பொருளையும் கைவிளக்கேற்றிக் காட்டிவைத்துள்ளார்.

"கர்மஸ்வநாதிவிஷமேஷு ஸமோ தயாளுஃ
ஸ்வேனைவ க்லப்தமபதேசமவேக்ஷமாணஃ,
ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த!
ஸ்வாபாவிகம் தவ ஸுஹ்ருத்த்வமிதம் க்ருணந்தி."

என்பது அந்த சுலோகம். கீழே நிதியுள்ளவிடத்தில் மேலே நடந்து செல்வார்க்கு உள்ளே நிதியுள்ளதென்று தெரியாதாப்போலே, இந்த சுலோகத்தை [இந்த சுலோகத்தையென்று என்ன? தேசிகனுடைய எந்த சுலோகத்தையும்] உருப்போடுவார்க்கு உள்ளுள்ள பொருள் தெரிய விரகில்லையன்றோ? நிதியை நானே யெடுத்துக் காட்டுகிறேன். இது பதினொன்காவது சுலோகம்; கீழே பன்னிரண்டாவதான "த்வாம் மாதரஞ்ச பிதரஞ்ச" என்கிற சுலோகத்தில் உபாத்தமான ச்ருதியில் ஸுஹ்ருத் எனப்பட்ட மஹாகுணத்தை இந்த சுலோகத்தினால் விவரிக்கின்றார். எம்பெருமான் தனது ஸஹஜ ஸௌஹார்த்த குணத்தினால் தான் சரணாகதியில் ஆபிமுக்க்யத்தை விளைவித்தருளுகிறானென்பதை சுலோகத்தின் முடிவில் காட்டியருளினர். "சோபநம் ஹ்ருத் யஸ்ய ஸঃ—ஸுஹ்ருத்" என்று வ்யுத்பத்தியென்பதை வ்யுத்பந்நர் உணர்வர். சோபநாசம்ஸியான ஹ்ருதயத்தையுடையவன் எம்பெருமான். இந்த

ஸௌஹ்ருத்த்வம் செய்யுமத்தைக் கேளீர். எம்பெருமான், விமுகர்களையும் வாரிப் பிடியாகப் பிடிக்கவேண்டி. ஸர்வமுக்தி ப்ரஸங்கபரிஹாரார்த்தமாகச் சில வியாஜங்களை ஸ்வயமேவ கல்பித்துக்கொள்வதை சாஸ்த்ர முகத்தினாலறிகிறோம். இதை தேசிகன் பரமபதஸோபானத்திலே நன்கு காட்டியிருக்கிறார். அதில் ஆரம்பத்திலேயே எழுதியுள்ள வாக்கியங்கள் இவை :—

"அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனைத் தினைத்தனையும் விடாதே அநுபவிக்க ப்ராப்தரான க்ஷேத்ரஜ்ஞர் அநாத்யவித்யா கர்மாதி ப்ரவாஹத்திலொழுகிக் கரையேற விரகற்று அலமருகின்ற படியைக் கண்டருளின பரமகாருணிகனான பரமசேஷிதானே ஞானக் கைகொடுத்து இவர்களையெடுக்க இடம்பார்த்து அஜ்ஞாத யாத்ருச்சிக ஆநுஷங்கிக ப்ராஸங்கிக ஸாமாந்யபுத்திமூல ஸுக்ருத விசேஷங்களை வ்யாஜமாகக்கொண்டு விசேஷ கடாக்ஷம்பண்ணி அத்வேஷ ஆபிமுக்ய ஸாத்விக ஸம்பாஷணாதிகளை யுண்டாக்கி" இத்யாதிகள். இவை கிடக்க; ப்ரக்ருதச்லோகத்தில் *ஸ்வேனைவ க்ல்ப்தம் அபதேசம் அவேக்ஷமாண: * என்றதை ஆழ்ந்து நோக்கவேண்டாம்; மேலெழ நோக்கினாலும் போதும். பதத்தின்மேல் பொருள் என்னவென்றால்,

ஸ்வேனைவ — தானாகவே, க்ல்ப்தம் — கல்பித்துக்கொண்ட, அபதேசம்—வ்யாஜவிசேஷத்தை, அவேக்ஷமாண:—கடாக்ஷித்தவனாய்.

இப்படியெல்லாம் தேசிகன் சொல்லிவைத்ததானது உண்மையில் ஸ்ரீ வசனபூஷணத்தில்—

"என்னாரைச் சொன்னாய் என்பேரைச் சொன்னாய் என்னடியாரை நோக்கினாய் அவர்கள் விடாயைத் தீர்த்தாய் அவர்களுக்கொதுங்க நிழலைக்கொடுத்தாய் என்றாப்போலே சிலவற்றை ஏறிட்டு மடிமாங்காயிட்டு... ...ஜன்மபரம்பரைகள் தோறும் யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிகமென்கிற ஸுக்ருத விசேஷங்களைக் கற்பித்துக்கொண்டு தானே அவற்றை ஒன்று பத்தாக்கி நடத்திக்கொண்டு போரும்"

என்கிற ஸ்ரீஸூக்திரத்னங்களை ஸந்தத சிந்தனை பண்ணியே யென்பதில் ஐயுறவேண்டா. மேலேயெடுத்துக்காட்டிய ஸ்ரீவசனபூஷண ஸ்ரீஸூக்திகளில் காணும் பொருள் *ஸ்வேனைவ க்ல்ப்தமபதேசமவேக்ஷமாண: *

என்கிற இந்த ச்லோகத்தில் கண்ணாடியிற்போல் அப்படியே பிரதி பலிக்கவில்லையா? இதெல்லாம் அதிவாதம் ப்ரௌடவாதம் ப்ரசம்ஸா வாதம் என்று கண்ணழிக்க வொண்ணுமா?

இதற்கு மேலும் நோக்கவேணும். *ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த !* என்பது மூன்றாவது பாதம். இதில் த்வரஸே என்கிற க்ரியாபதம் பேறு யாருடையதென்பதை நிஸ்ஸந்தேஹ விபர்யயமாகக் காட்டித்தரவில்லையா? *இன்று விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான்* என்ற திருவாய்மொழிப் பாசுரத்தை மொழிபெயர்த்தவத்தனையேயோ? சாஸ்த்ரார்த்தத்தைச் சிந்தித்து உள்ளமுருகியன்றோ உரைத்திருக்கிறார். *மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து தொலையட்டுமிவன் என்று கைவாங்கி யிராதே, *கூவிக்கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ! * என்று இவன் கதறுவது அற்பமென்னும்படி 'கூடி வாழுங்காலமின்னுங் குறுகாதோ' என்று அவன் பதறியிருப்பது பெருங்கடல் போன்றது என்கிற தத்துவத் தையன்றோ த்வரஸே என்பதனால் தெள்ளிதாக உணர்த்தியிருக்கின்றார் தேசிகன்.

உபநிஷத்தானது, * ரஸோ வை ஸ:, ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆநந்தீ பவதி * என்றது. இதில் [அயம் லப்த்வா] என்று லாபத்தை சேதநகதமாக ஓதியிருக்கச் செய்தேயும், ஸ்வாமி பாஷ்ய காரர் * அநாவ்ருத்திஸூத்ர ஸ்ரீபாஷ்யத்தில் "பரம புருஷ: ஸத்ய ஸங்கல்ப: அத்யர்த்த ப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா" என்றருளிச் செய் துள்ள ஸ்ரீஸூக்தியானது ஸாம்ப்ரதாயிக தத்வார்த்தங்களுக்கெல்லாம் வெற்றிக்கொடி நாட்டினது போலன்றோவுள்ளது *அநாவ்ருத்தி: சப்தாத்* என்கிற ஸூத்ரம் இங்கு மூலம். முக்தாத்மாவுக்குப் புநராவ்ருத்தி கிடையாதென்பதைக் கூறுகின்ற ப்ரமாணங்களைக் காட்டுவதொன்றே இங்கு வேண்டுவது. அதை அழகுபடக் காட்டியருளியாயிற்று. அடியில் "ஸூத்ராக்ஷராணி வ்யாக்யாஸ்யந்தே" என்று ப்ரதிஜ்ஞை செய்தருளினவர் நம் ஸ்வாமி. உதகாக்ஷரமென்று தோஷம் கூறவொண் ணாதபடி அக்ஷரலப்யமான அர்த்தத்திற்கு மேற்பட எழுதமாட்டே னென்று உறுதிகொண்டவர் நமது பாஷ்யகாரரொருவரே. அப்படிப் பட்டவர் இங்கு மூலத்திற்கு ஸம்பந்தமற்ற இந்த வாக்கியத்தை எதற்காக வருளிச்செய்தாரென்கிற விசாரம் நமக்கு வேண்டா. உள்ள வாக்கியத்தின் சீரிய பொருளைச் சிந்தனை செய்து நுண்பொருளுணர்வார் மஹாபாக்யசாலிகள்.

கீழே யெடுத்துக்காட்டிய சரணாகதி தீபிகாச்லோகமும் இந்த பாஷ்யஸூக்தியையே ஜீவாதுவாகக் கொண்டது. மறுபடியும் அதை நிகூரூட்டுகிறேன் — ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே என்கிற சுலோகமிருக்கட்டும். மற்ருேரிடத்தில் இதற்கு முரணாகச் சொல்லி யிருப்பதாகச் சிலர் காட்டவுங் கூடும். வேறு சில விஷயங்களில் முரண்பாடு காணக்கூடுமென்று கொண்டாலும் இவ்விஷயத்தில் அது ஸர்வாத்மநா அப்ரஸக்தம். • செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளிய வோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்ருேமே • என்று சொல்லி யுள்ள ஸ்வாமி இத்தகைய விஷயத்தையன்ருே முக்கியமாக நெஞ்சிற் கொண்டது. • வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணி லென்று ஆர்வுற்ற என்னையொழிய என்னில் முன்னம் பாரித்துத் தானென்னை முற்றப் பருகினுன் • என்கிற திருவாய்மொழிப் பாசுரமன்ருே நமது ஸ்ரீபாஷ்யகாரர்க்கு ஜீவாதுவாயிருந்தது.

திருவாய்மொழி காட்டுவதிருக்கட்டும். பகவத் பாஷ்யகார ஸூக்தியையும் அவர் தாம் தமக்கு ஜீவநாடியாகக் கொண்ட கீதாச்லோ கத்தையும் ஆராய்வோம். • சப்தாத் • என்று ஸூத்ரகாரர் சொன்ன படியாலே பாஷ்யகாரர் "சப்தச்ச—ஸகல்வேவம் வர்த்தயந் யாவதா யுஷம் ப்ரஹ்மலோகம் அபிஸம்பத்யதே ந ச புநராவர்த்ததே ந ச புநராவர்த்ததே இத்யாதிக:" என்ருர். அதற்குமேலும் "ததா ச பகவதா ஸ்வயமேவோக்தம்" என்று தொடங்கி *மாமுபேத்ய து கௌந்தேய! புநர்ஜந்ம ந வித்யதே* என்கிற கீதாச்லோகத்தையு மெடுத்துக் காட்டியருளினுர். இதற்கு மேலும் என்ன காட்டவேண்டி யிருக்கிறது? ஆனுலும் இந்த ப்ரஸங்கத்தில், மதாந்தரஸ்தர்களுக்கு ஸர்வாத்மநா நிலமல்லாத அருமருந்தன்ன அர்த்த விசேஷத்தைக் காட்டியருள வேணுமென்னு மபிநிவேச முண்டாகி, இந்த ப்ரகரணம் விட்டால் வேறு ப்ரகரணம் இதற்கு வாய்ப்பதரிது என்றும் திருவுள்ளம் பற்றி "ந ச பரமபுருஷஸ் ஸத்யஸங்கல்ப: அத்யர்த்த ப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசித் ஆவர்த்தயிஷ்யதி" என்கிற அநர்க்க ஸ்ரீஸூக்தியை யருளிச் செய்தாராயிற்று.

அந்த பங்க்தியை அப்படி யெழுதாமல் "ந ச பரமபுருஷ: அத்யந்தம் ஆர்த்யா உபஸ்திதம் பக்தம் ஆவர்த்தயிஷ்யதி" என்று எழுதியிருக்கலாமா கூடாதா? என்று பார்ப்போம். தாராளமாக எழுதி

யிருக்கலாம், ஏன் அப்படி யெழுதவில்லை? என்று விவேக குசலர்கள் விமர்சிக்கவேணும். நெஞ்சை நடுநிலையில் வைத்து விமர்சித்தால் என்ன தேறுமோ, அதை விளக்கிக் காட்டுகிறேன். 'எம்பெருமான் விஷயத்தில் சேதநனுடைய பசி அதிகமா? சேதநன் விஷயத்தில் எம் பெருமானுடைய பசி அதிகமா?' என்று ஒரு கேள்வி. 'எம்பெருமானை யநுபவிப்பதால் சேதநனுக்கு ஆனந்தம் அதிகமா? சேதநனை யநுபவிப் பதால் எம்பெருமானுக்கு ஆனந்தம் அதிகமா?' என்று மற்றொரு கேள்வி. இக் கேள்விகளிரண்டும் பர்யாயத: ஒன்றுபோலிருக்கிறதே யென்று சொல்லிவிடலாம்; அஃதிருக்கட்டும். வெவ்வேறு கேள்விகளாகவே கொண்டு விடையிறுப்பது நலம்.

ஸ்ரீ வைகுண்ட கத்யத்தில் * கதா அஹம் பகவந்தம்... கதா மாம் பகவாந் * இத்யாதி ஸாதித்திருக்கிறபடியே ஆர்த்திமிக்குக் கதறுகிறவன் சேதநனாகையாலே இவனுடைய பசிதான் அதிகம் என்றும்; பசி தீர்ந்த வனுக்கே ஆனந்தம் ப்ராப்தமாகையாலே இவனுடைய ஆனந்தமே அதிகமென்றும் நினைக்கக்கூடும். * அயம் லப்த்வா ஆநந்தீ பவதி * என்று உபநிஷத்து ஓதியிருக்கையாலே அதை உபஷ்டம்பகமாகவும் காட்டக் கூடும். இது மருளென்பதை இனி உபபாதிக்கிறேன். முக்தன் அங்குச் சென்று ஏதோ ஸாமகானம்பண்ணுவதாக அந்த உபநிஷத்தே ஓதிற்று. *[ஏதத் ஸாம காயந் நாஸ்தே ]* அந்த ஸாமம் எது வென்பதையும் தெரிந்துகொண்டிருக்கிறோம்; அதை இந் நிலத்திலேயே நாம் ஓது கிறோம். * அஹமன்னம் அஹமன்னம் அஹமன்னம் * என்று முந்துற முன்னம் ஓதுவது. பின்பு * அஹமந்நாத: அஹமந்நாத: அஹமந்நாத: * என்று ஓதுவது. * அஹமன்னம் அன்னமதந்தம் அத்மி * என்று முடிவாக ஓதுவது. ஆக இம் மூன்று வாக்யங்களினுடையவும் பொருளையுணர்ந்தால் பலகலக்கங்கள் தீர்ந்ததாகும். * வேதாந்தா சார்யஸம்ஜ்ஞோம் அவஹித பஹுவித்ஸார்த்தம் அந்வர்த்தயாமி * என்ற தேசிகன் இவ்வர்த்த தத்வத்தையுணர்ந்தும் உணர்த்தியும் அந்வர்த்த ஸம்ஜ்ஞராகி யிருக்கிறார்.

* அஹமந்நம் அஹமந்நம் அஹமந்நம் * என்று ஒரு தடவைக்கு மூன்று தடவையாக ஓதுவதனால் - என்னில் முன்னம் பாரித்து விடாய்த் திருக்கிற எம்பெருமானுடைய பசியைத் தீர்க்க அவனுக்கு நான் அன்ன மாகிறேனென்றதாயிற்று. எம்பெருமானுக்கு மட்டுமன்றே விடாய்; சேதநனை இவனுக்கும் விடாயுண்டே; அவனுடைய விடாயை

முன்னம் தீர்த்தபிறகு தன்விடாயும் தீரப்பெறுகையை * அஹமந்நாத: அஹமந்நாத: அஹமந்நாத: * எங்கிற அநுஸந்தான முணர்த்துகிறது. இங்ஙனே இரண்டு வாக்கியங்களினுல் சொல்லப்பட்ட அர்த்தத்தை * அஹமந்நம் அந்நமதந்தம் அத்மி * என்கிற மூன்ருவது வாக்கியம் நன்கு விவரிக்கின்றது. இதன்பொருளாவது—'நான் முந்துற முன்னம் எம்பெருமானுக்கு அன்னமாகியிருந்து, என்னை யநுபவித்து மகிழ்கிற அவனை நானுமநுபவித்து மகிழ்கிறேன்' என்பதாம். முக்தனுகிய தன்னை யநுபவித்து எம்பெருமான் நெடுநாளைய விடாய் தீர்ந்து மகிழ்ந்து நிற்கையில் அந்த மகிழ்ச்சியைக் கண்டு தான் மகிழ்கிருன். இவன் அசேதனமல்லாமல் சேதனனுய் ஞானனந்தங்களை வடிவாகவுடையனு யிருக்கையாலே தன்னுடைய ஆனந்தமும் பயன் பெற்றதாக வேணுமே; அசித்திற்காட்டில் ஒருவாசி ஏற்படவேணுமே. தன்னைப்பெற்று எம்பெருமான் ஆனந்திப்பதைக் கண்டு 'நம்மால் எம்பெருமானுக்கு இப்படியொரு ஆனந்த முண்டாயிற்றே!' என்று அநுஸந்தித்து அதனுல் தான் ஆனந்திக்கை அவர்ஜநீயம். இதுதான் * அஹமந்நமந்நமதந்தமத்மி * என்கிற சரமவாக்கியத்தின் பரமதாத்பரியம்.

ஆத்மாவுக்கு சைதந்யாதீனமான போக்த்ருத்வம் இருந்தாலும், அது பாரதந்த்ரியத்தையும் போக்யதையையும் ஸ்வரூபவுண்மையாகத் திருமந்திரத்தினுல் கண்டறிந்தவனுடைய போக்த்ருத்வமாகில் தன்னுடைய ரஸத்துக்கு உடலன்றிக்கே சேஷியினுடைய ரஸத்துக்கே உடலாயிருக்குமென்று கிடாம்பியப்புள்ளார் பலகால் பணிக்கக் கேட்டிருக்கிருர். *படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே * என்கிற குலசேகரப்பெருமாள் பாசுரத்தில் * படியாய்க் கிடந்து * என்பதனுல் அசேதநவ்ருத்தியை முன்னம் அபேக்ஷித்து, பின்னை * உன்பவளவாய் காண்பேனே* என்று சேதநவ்ருத்தியும் அபேக்ஷிக்கப்பட்டது. இத்தலையை விநியோகங்கொண்ட எம்பெருமானுக்கு விளையும் உகப்பைக் கண்டு உகப்பதுதவிர வேறு பயனில்லை சேதனனுடைய ஆனந்தித்வத்திற்கு—என்று நம் ஆசாரியர்களனைவரும் பணிக்கும்படி. .... *

## — ப்ரபத்தியின் உபாயத்வ விசாரம் —

சாஸ்த்ரஜ்ஞர்கள் சில விஷயங்களை தர்மிக்ராஹகமாநஸித்தம் என்பர்கள், அத்தரீதியில் ப்ரபத்தியின் அநுபாயத்வமும் தர்மிக்ராஹக

மாநஸித்தமென்று கொள்ளவேணும். ,ப்ரபத்தி இன்னதென்பதைக் காட்டும் வசனம் யாவருமறிந்தது; • த்வமேவ உபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதிः, சரணாகதிரித்யுக்தா • என்பது. நீயே உபாயமாயிருக்க வேணுமென்கைதான் ப்ரபத்தி—என்றுநிற்க, ப்ரபத்தியும் உபாயமென்றால் இதற்கு ஏதேனும் அர்த்தமுண்டோ?

ஆளவந்தார் தாம் அருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹத்தில் •நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபீ: • என்று ஸ்பஷ்டமாகச் சொல்லிவைத்தார். இது வியாக்கியான ஸாபேக்ஷமல்லாத மூலம். ஆனாலும் இங்கு தேசிகன் பரக்க வியாக்கியானமிட்டிருக்கிறார். என்ன இட்டிருக்கிறாரென்றால், [ரக்ஷாயாம்] "முக்தவ்யாபாரந்யாயேந ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வ அநுபபத்தி தர்சநாச்ச நாஸ்ய .ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதாபுத்திரபி ஸ்யாத் இதி பாவ:, அத: தைஸ்தைராராதிதோ பகவாநேவ ஸர்வத்ர உபாய:" என்று கல்வெட்டாக எழுதியிருக்கிறார். இங்கு "முக்தவ்யாபாரந்யாயேந" என்றெழுதியிருக்கிற இதுதான் இவ்விஷயத்தில் ஜீவநாடியானது. கேவலம் பலாநுபவத்தில் ஊன்றின முக்தனுக்கு ஸாதநாநுஷ்டான ரூபமான செயல் லவலேசமுமில்லை, அது அபேக்ஷிதமுமன்று; ஆனாலும் முக்தன் வாளாவிருப்பதில்லை. செய்வனவெல்லாம் ஸ்வயம் போக்யமாகக்கொண்டு செய்கிறான். பரமைகாந்திகளான முமுக்ஷுக்களின் வியாபாரங்களும் அப்படிப்பட்டவையே யென்று நிரூபித்திருக்கிறார்.

தேசிகனுக்கு வழிகாட்டியாக ரஹஸ்யக்ரந்தங்கள் பணித்தவர் "ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது; ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்" என்றருளிச்செய்ததை நிதியாகக் கொண்டே தேசிகன் கத்யபத்யங்களை அபரிமிதமாக எழுதிவைத்துள்ளார். அவற்றில் தலையானது •உபாயஸ் ஸ்வப்ராப்தேருபநிஷததீதஸ் ஸ பகவாந் ப்ரஸத்த்யை தஸ்யோக்தே ப்ரபதந நிதித்யாஸநகதீ, ததாரோஹ: பும்ஸாம் ஸுக்ருதபரிபாகேந மஹதா நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாணநிபுண:• என்கிற (தேசிகனுடைய) ச்லோகரத்னம். இதில் "நிதாநம் தத்ராபி ஸ்வயம் அகிலநிர்மாணநிபுண:" என்ற நான்காவது பாதமானது "ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்" என்கிற ஸ்ரீலோகாசார்ய திவ்ய ஸூக்தியின் ப்ரதிச்சந்த

மென்பதில் ஐயமுண்டோ? *ஸ்வப்ராபகேஸ் ஸ்வயமேவ ஸாதநதயா ஜோகுஷ்யமாண: ச்ருதௌ* இத்யாதிகளும் அபரிமிதம். "எம்பெருமானை அடிபணிகின்றவர்களாகச் சொல்லப்படுமவர்கள் உண்மையில் தாமாக அடிபணிகின்றார்களல்லர்; பின்னையோவென்னில், புழுகுறித்தது எழுத்தாமாப்போலே யத்தனை" என்கிற நம்பிள்ளை ஸூக்தியைப் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானங்களிலேகண்ட தேசிகன் அதை ச்லோகபத்தமாக்கினார்; *குணக்ஷதலிபிக்ரமாத் உபநிபாதிந: பாதி ந: * என்று; இதைத்தான் குணாக்ஷரந்யாயமென்பது. இந்த கணக்கிலே தேறுகிற நம்முடைய பகவதுபஸர்ப்பணத்தை உபாயமாகக் கொள்ளலாகாதென்று நிலையிட்டிருப்பவர் தேசிகன். ந்யாஸதிலகத்தில் *த்வய்யேகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம் ஸௌரயோமே ஸ்வதந்த்ராம்* என்று, எம்பெருமானைக்கூட உபாயமென்ன ஸஹியாத நித்யமுக்தகல்பர்களான மஹான்கள் திறத்திலே எனக்கு ப்ராவண்யாதிசயமுள்ளதாகக் கூறியிருக்கிறார்.

கீதா பாஷ்யத்தில் (8—14.) *அநந்யசேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச:, தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்யயுக்தஸ்ய யோகிந: * என்றவிடத்து "தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே; மத்ப்ராப்த்யநுகுண—உபாஸநவிபாகம் தத்விரோதிநிரஸநம் அத்யர்த்தமத்ப்ரியத்வாதிகஞ்ச அஹமேவ ததாமி இத்யர்த்த:. *யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: * இதி ஹி ச்ரூயதே." என்றுள்ள விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் "உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வசங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாம் ஆஹ—யமே வேதி.1; என்றெழுதிவைத்திருக்கிறார். "உக்தஸ்ய ச்ருதிமூலதாம் ஆஹ" என்றோ "ச்ருத்யநுக்ருஹீதோயம் அர்த்த இதி ப்ரகாசயதி" என்றோ அவதாரிகை வைக்கலாமாயிருக்க, பலவிடங்களில் கைப்பற்றின அந்த பத்ததியை இங்கே விட்டு "அதிவாத மாத்ரத்வ சங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ", என்று அவதாரிகை யிட்டிருப்பதை உற்று நோக்கவேணும்.

ப்ரபத்தி பண்ணவேணுமென்கிற புத்தி நமக்கேயுண்டானதா? எம்பெருமான் தந்தருளினதா? என்பதை நாம் முக்கியமாக ஆராய வேண்டும். நமக்கே யுண்டானதென்று தேறிவிடுமாயின் அதை உபாய மென்னத் தட்டில்லை. உபாயமென்றே சொல்லியாகவேண்டும். *வரத! தவ கலு ப்ரஸாதாத் ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்*

என்று ஆழ்வானருளிச்செய்ததை யடியொற்றி தேசிகனும் * ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்த ஸ்வ:தியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம் ஸ்வயம் * என்று ந்யாஸதசகத்தில் சொன்னார். இதில் ஸ்வசப்தத்தை எத்தனை தடவை ப்ரயோகித்திருக்கிறாரென்று எண்ணிப் பார்க்கவேணும். இதில் பூர்வார்த்தமிருக்கட்டும். உத்தரார்த்தத்தை உற்று நோக்கவேணும். "ஸ்வதத்தயா தியா" என்னலாமே எளிதாக. "ஸ்வதத்த ஸ்வதியா" என்று சொல்லியிருப்பதை நோக்குவாரில்லையே. * மருவித்தொழும் மனமே தந்தாய் * என்றார் ஆழ்வார். முன்னங்கொடுத்த மனம் தொழுமனமன்றிக்கே அழும்மனமா யிருந்தபடியால் அதைத் தவிர்த்து, தொழுகைக்காகப் புதியதொருமனம் தந்தருளினவம் எம்பெருமான் அவ்வருளிச் செயலை யடியொற்றி தேசிகன் பேசியிருக்க, இந்தச் சுவடறியாதார்க்கு என் சொல்லுவது? ஊமையரோடு செவிடர்வார்த்தை.

நியாயஸித்தாஞ்ஜனத்தில் * இயம் கேவல லக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா * என்றதையும், உடனே * ஸ்வஹேதுக்வதியம் ருந்தே * என்றதையும் * கிம் புநஸ் ஸஹகாரிணம் * என்றதையும் தனித்தனியே ஆழ்ந்து பார்க்கவேண்டாவா? ப்ரபத்தி யென்கிற வஸ்து தேறும்போதே தன்னிடத்தில் உபாயத்வத்தை அணுவளவும் ஸஹியாமலே தேறுவதனால் * ஸ்வஹேதுத்வதியம் ருந்தே * என்று வெட்டொன்று துண்டிரண்டாகச் சொல்லியுள்ளதன்றோ?

சாஸ்த்ரங்களில் ஒன்று விதிக்கப்படுமானால் அது ஸாதனமாக இருந்தே தீருமென்றும், ஸாதனமாகமாட்டாததை சாஸ்த்ரம் விதியாதென்றும், விதிவிஷயமானதற்கு ஸாதநத்வம் அநிவார்யமென்றும், சரமச்லோகத்தில் * மாமேகம் சரணம் வ்ரஜ * என்று விதிக்கப்பட்டிருக்கின்ற ப்ரபத்திக்கு எப்படி உபாயத்வம் இல்லாமற் போகுமென்றும் சிலர் சங்கிப்பதுண்டு; இந்த சங்கையை ந்யாஸதிலகத்தில் தேசிகனே வேரறஅரிந்து பொகட்டிருக்கிறார்; எங்ஙனேயென்னில்; * ஹேதுர் வைதேவிமர்சே பஜநவத் இதாத், சிந்து அநுஷ்டாநதாவலே வேதயஸ் த்வத்ப்ரபேதோ விவித இஹ ஸஹாயாபுதா அந்யா நபேக்ஷா * என்று கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டியிருக்கிறார் தத்துவத்தை. இதன் கருத்து யாதெனில்; ப்ரபத்தியானது விதிக்கப்பட்டிருப்பதனால் பக்திபோலே இதுவும் உபாயமென்று சொல்லக்கூடியதாயிருந்தாலும் இங்கு

அங்ஙனே கொள்வதற்கிடமில்லை; ஒவ்வொரு வித்யையிலும் எம்பெருமானுக்கு ஒவ்வொரு ரூபம் அறியக்கடவதாயிருக்கிற கணக்கிலே இந்த ப்ரபத்திவித்யையில் இதராநபேக்ஷ உபாயத்வம் [அதாவது, பிறிதொன்றை எதிர்பாராத உபாயத்வம்] வேத்யாகாரமாக இருக்கையாலே என்கை. இப்படி தேசிகன் வெட்ட வெளிச்சமாகச் சொல்லியிருக்க, இன்னமும் இதில் விவரிக்க விஷயமேயில்லையே. ...

## ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் மோக்ஷப்ரதத்வ விசாரம்

ஆளவந்தார் அருளிச்செய்த சதுச்ச்லோகியில் மூன்றுவது சுலோகத்தில் *ச்ரேயோ ந ஹ்யரவிந்த லோசநமநःகாந்தா ப்ரஸாதாத்ருதே ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்வஸு நருணும் ஸம்பாவ்யதே கர்ஹிசித் * என்பது உத்தரார்த்தம். மோக்ஷபர்யந்தமான எல்லாப் பேறுகளும் பிராட்டியின் அநுக்ரஹத்தாலல்லது ஸம்பவிக்கமாட்டாதென்பது இதன் பொருள். இவ்விடத்தில் ஒரு சங்கை யுண்டாகும். (அதாவது) அபார காருண்ய வாத்ஸல்யாதி ஸகல ஸத்குண நிதியான எம்பெருமான் நமது இடர்களைக் களைந்து இன்பங்களையளிக்கவல்லவனாயிருக்க, அவனுடைய அனுக்ரஹத்தினலாகாதது ஒன்றுண்டோ? பிராட்டியின் அநுக்ரஹம் எதற்காக? என்று; இங்கு இந்த சங்கையை ஸ்ரீநிகமாந்தகுரு தோன்றுவித்து அந்தச்லோகத்தின் பாஷ்யத்திலும் வேறிடங்களிலும் பரிஹார முணர்த்தியிருக்கிருர். ''நநு மோக்ஷப்ரதத்வம் பகவத ஏவேதி ஸர்வத்ர ஸ்தாபிதம்'' என்று தொடங்கி சங்கையை உத்க்ஷேபித்து 'மைவம்' என்று தொடங்கி தத்பரிஹாரம் பண்ணியிருப்பதைக் காணவேணும். ப்ரக்ருத ச்லோகபாஷ்யத்தின் முடிவில் நிஷ்கர்ஷம் செய்திருப்பது என்னவென்ருல், ''மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணும் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்'' என்பது முதல்வாக்கியம். இதன் பொருளாவது, மோக்ஷமளிப்பவன் எம்பெருமானே; பிராட்டியோவென்னில், புருஷகாரபூதையா யிருக்கிருளென்பது யாவருமிசைந்தது—என்பதாம்.

(அந்த சதுச்ச்லோகியில்தானே) இரண்டாவது சுலோகத்தில் மோக்ஷ ப்ரதாந ப்ரஸ்தாவமே யில்லாதிருக்கவும் ப்ராஸங்கிகமாகக் கொண்ட விசாரத்தில் தேசிகனே காரிகை யொன்று இட்டிருக்கிருர். (அதாவது) *அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்ய த்வயம் ச்ரியः, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே * என்பு

தாம்: இதன் பொருளாவது, கர்மாநுரூபமாகப் பேறு பெறுவிக்குமவன் எம்பெருமானே; பிராட்டி தான் இரண்டு க்ருத்யங்களை வைத்துக் கொள்ளுகிறாள்; அவன் நிக்ரஹிக்கும்போது அதைத் தடுப்பதும் அநுக்ரஹிக்கும்போது அதை மேன்மேலும் வளரச்செய்வது மென்கை. அதற்குமேல் "அத்ர வரதகுருபதேச அநுஸாரிபி: வ்யாஸார்யைச் ச உக்தம்—ப்ரதாபேஷ்மல பித்ருத்வ துராஸத பகவத் ஸமாச்ரயண ஸித்தயே புருஷகாராநுப்ரவிஷ்ட வாத்ஸல்ய நிர்ப்பர லக்ஷ்மீ ஸமாச்ரயணம் ஸ்ரீமச்சப்தவிவரணமுகேந அபிதீயதே இதி" என்றெழுதியுள்ளார் ஸ்ரீதேசிகன். மேலெடுத்தவாக்யத்தில் வ்யாஸார்ய ரென்னப்பட்டவர் ச்ருதப்ரகாசிகாபட்டர்; அவர்க்கு வரதகுருபதேசாநுஸாரித்வ விசேஷணமிட்டதனால் ஸத்ஸம்ப்ரதாயசுத்தி காட்டப்பட்டதாயிற்று. தேசிகனுக்கு ப்ராசார்யரான நடதூரம்மாள் உபதேசித்த யதார்த்தமான அர்த்தத்தையே அவருடைய திருவடியான ச்ருதப்ரகாசிகாபட்டர் பொறித்துவைத்தாரென்று தெரிவித்துக்கொண்டபடி. ச்ருதப்ரகாசிகாபட்டர் பொறித்துவைத்ததென்னவென்றால்; எம்பெருமான் வாத்ஸல்யாதி குணநிதியாயிருக்கச் செய்தேயும் சீற்றங்கொள்ளும்படியான பிதாவாயுமிருக்கையாலே அணுகவொண்ணாதபடியாகவுமிருக்க நேருமாகையாலே அணுகுவிப்பதற்குப் பாங்கான தண்ணளிவாய்ந்த பிராட்டியைப் புருஷகாரமாக வரிப்பது ஸ்ரீமச்சப்தவிவரண முகத்தாலே சொல்லப்படுகிறது என்பதாம். லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:, மமாபி ச மதம் ஹ்யேதத் நாந்யதா லக்ஷணம் பவேத் என்கிற ப்ரமாணத்தை யார்தாம் மீறமுடியும். நீரிலே நெருப்புக்கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தேதீரும். அப்போது நிர்ப்பயமாக அணுகுவதற்குப் பிராட்டியின் புரஸ்கரணம் அவர்ஜநீயமானதே. ஆனதுபற்றியே ஆளவந்தார் ச்ரேயோ நஹ்யரவிந்தேத் யாதியை யருளிச்செய்தார்—என்று விளக்கிக் காட்டியிருக்கிறார்.

மேலேகுறித்த ச்ருதப்ரகாசிகாபட்டருடைய ஸ்ரீஸூக்திக்கும் முன்னே "உக்தஞ்ச ஸ்ரீவிஷ்ணுசித்தை: கத்யவ்யாக்யாநாரம்பே; மாத்ருத்வைகரூபாம் ச்ரியம் ப்ரபத்யதே; மாதா ஹிதாதபி புத்ரஸ்ய ப்ரியமேவ பச்யதி. பிதா து உபயம் பச்யதி. அதோ தண்டதரத்வ ஹீநதைவ அவலம்பநம் அஸ்மாக் தசாயம் ஆஸீத் இதி" என்று எங்களாழ்வான் ஸ்ரீஸூக்தியையு மெடுத்துக்காட்டியிருக்கிறார் தேசிகன். வாத்ஸல்யாதிகளைப்போலே தண்டதரத்வமுடைய எம்பெருமானை

யணுகுவதற்கு நித்யமஜ்ஞாத நிக்ரஹையான பிராட்டியைப் புரஸ்கரிக்கவேண்டியது அவசியமாகிறது—என்பதையே தேசிகனைப்போல் ஒவ்வோராசார்யரும் அருளிச்செய்து வைத்துள்ளார். எங்களாழ்வானுடைய ஸ்ரீஸூக்திக்கு முன்னே பட்டருடைய ஸ்ரீகுணரத்நகோச ஸ்ரீஸூக்தியையும் உதாஹரித்திருக்கிறார். "ஆஹுச் ச... ப்ரதேவத்வத்ப்ரேயாந் இத்யாரப்ய மாதா ததஸி ந: இதி" என்று. இவ்வளவோடும் நின்றிலர்; உடனே "ஏவம் அநப்யுபகமே தாம் புரஸ்க்ருத்ய பகவதாச்ரயணமபி தத்ரதத்ரோக்தம் துஸ்ஸ்தம் ஸ்யாத்" என்றுமெழுதியிருக்கிறார். இதன் பொருள்—தண்டதரனான எம்பெருமானுடைய சீற்றத்தையாற்றுதற்குப் பிராட்டியைப் புருஷகாரமாகக் கொள்ளவேணுமென்று இசையாதொழியில் ஆங்காங்கு சாஸ்த்ரங்களில் பிராட்டியைப் புரஸ்கரித்து எம்பெருமானை ஆச்ரயிக்க வேணுமென்று கூறியிருப்பது பொருந்தாமற்போகும்—என்கை. இஃதொன்று போதும் பிராட்டி விஷயத்தில் தேசிக ஸித்தாந்தத்தையுணர.

இதே இடத்தில்தான் (கீழே சொன்ன) அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:. நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷண மநுக்ரஹே என்னும் காரிகையை தேசிகனிட்டிருக்கிறார். இந்த காரிகையானது ப்ரக்ருதவிஷயத்தில் தோன்றும் ஸகலஸந்தேஹங்களையும் வேரறுக்கவல்லது. பிராட்டியின் இத்தகைய இரண்டு க்ருத்யங்களைத் திருவுள்ளம்பற்றியே ஆளவந்தார் ச்ரேயோ ந ஹ்யரவிந்த லோசந...... இத்யாதியை யருளிச்செய்தாரென்று சதுச்ச்லோகீ பாஷ்யத்தில் நிகமனம் செய்திருக்கிறார் தேசிகன்.

மீண்டும் ஸாரமாகச் சொல்லுகிறேன்—அவ்விடத்து பாஷ்யத்தில் "நநு மோக்ஷப்ரதத்வம் பகவத ஏவேதி ஸர்வத்ர ஸ்தாபிதம்" என்று தேசிகன் உத்க்ஷேபித்த ஆசங்கையைப் பரிஹரிக்குமிடத்து "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணும் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்றெழுதியிருப்பதுண்டே, இஃதொன்றே போதுமே. இதற்கு அடுத்த வாக்கியமோ, "பரிபூர்ணநுபவ ப்ரதாந ஸங்கல்பஸ்து பகவத: ஸ்வஸ்யைவ வா ஸபத்நீகஸ்ய வா இதி யதாப்ரமாணம் பவது" என்பதாம். ப்ரமாணஸாகரபாரங்கதரான தேசிகன் ப்ரமாண பரிசீலநபூர்வகமாகவும் ஆசார்யோபதேசாநுஸாரமாகவும் ஸித்தாந்தப் பொருளை விவரியாதே "யதாப்ரமாணம் பவது" என்றது ஏன்? என்கிற

விசாரம் வேண்டா; உள்ள வாக்யத்தை விமர்சிக்க. பலனளிப்பவன் பலப்ரதான ஸங்கல்பம் செய்யவேண்டியவன்; எவன் பலனளிப்பவனோ அவன் ஸங்கல்ப கர்த்தாவாவான். ப்ரக்ருதமான மோக்ஷப்ரதானத்தில் ஸங்கல்பக்ருத்யாதிகாரியைத் தெரிவிக்கின்ற தேசிகன் "ஸங்கல்ப: பகவத: ஸ்வஸ்யைவ வா? பத்ந்யா அபி வா?" என்று விகல்ப சரீரத்தை வைத்திடாதது முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது.

நியாயஸித்தாஞ்ஜனத்தில் * இயம் கேவலலக்ஷ்மீசோபாய த்வப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே * என்கிற காரிகை யானது ப்ரபத்தியின் உபாயத்வத்தைமட்டும் தவிர்ப்பதன்று; பிராட்டியின் உபாயத்வத்தைத்தான் முந்துற முன்னம் தவிர்ப்பது. பிராட்டிக்கும் உபாயத்வ முண்டென்று எண்ணமிருந்தால் * லக்ஷ்மீ ததீசோபாயத்வப்ரத்யயாத்மிகா * என்றன்றோ வசனவ்யக்தி வெளிவந்திருக்கும், இச் சிறுவிஷயத்தையும் க்ராஹிக்கமாட்டிற்றிலர் இதாநீந்தனர்.

ஸம்ஸ்க்ருத நூல்களில் இங்ஙனே விமர்சித்து விளக்கின தேசிகனே சில்லரை ரஹஸ்யங்களில் எழுதிவைத்தவைகளையும் தெரிவிக்கிறேன்—ரஹஸ்ய ரத்நாவளி யென்றும் அதன் ஹ்ருதயமென்றும் இரண்டு ரஹஸ்யங்கள் எழுதியிருக்கிறார். முப்பது வாக்யங்கள்கொண்ட ரஹஸ்ய ரத்நாவளியில் நான்காவது வாக்கியம்—"ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள். இவளைப் புருஷகாரமாக்கவேண்டுகிறது ஈச்வரன் தண்டதரனாகையாலே" என்று பணித்தார். இதன் விவரணமான ரஹஸ்ய ரத்நாவலீ ஹ்ருதயத்தில் "இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்" என்றதற்கு—"* பவேயம் சரணம் ஹி வ: * என்றருளிச் செய்தபடியே இவர்களுக்கு ரக்ஷாஹேதுவாகிறாளென்றபடி" என்று விவரணம் காட்டினார்தாமே. ரக்ஷகத்வமும் ரக்ஷாஹேதுத்வமும் பர்யாயமன்று; ஈச்வரனை ரக்ஷாஹேதுவென்று யாரும் சொல்லுவதில்லையே. ரக்ஷாஹேதுத்வமே பிராட்டிக்குப் பொருந்துமென்று காட்டினாராயிற்று. ... •

**ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியர் எழுதிய உபயஸித்தாந்தஸாமரஸ்யம்**

**முற்றுப்பெற்றது.**

ஸ்ரீ:

# தேவாலயங்களும்-ஸத்ஸம்ப்ரதாயவிஜயமும்

---

## — ஸ்ரீமத் வரவரமுனிஸம்ப்ரதாயத்தின் நன்னேற்றம் —

திவ்ய தேசங்களான விஷ்ணுவாலயங்களெல்லாம் அநாதிகாலமாக ஸ்ரீவரவரமுநி ஸம்ப்ரதாயமாகவே விளங்கிவருகின்றனவென்பதில் யார்க்கும் விவாதமிராது. சோழநாட்டில் மூன்று நான்கு அல்லது ஐந்தாறு, நடுநாட்டில் ஒன்று, தொண்டைநாட்டில் இரண்டு மூன்று, ஆக பத்தெட்டு ஸ்தலங்கள் தவிர மற்ற ஸ்தலங்களெல்லாம் தென்கலையாகவே விளங்கி வருகின்றன. வடகலையாகக் காணும் சில திவ்ய தேசங்கள் ஸமீபகாலத்தில் வடகலையாக்கப்பட்டன வென்பதிலும் யார்க்கும் ஸந்தேஹமிராது. சோழநாட்டில் கண்டியூரையும் தஞ்சை மாமணிக் கோயிலையும் தென்கலையாக ஸேவித்தவர்கள் நாளைக்கும் பல்லாயிரவர் உளர். அடியேனும் பலகால் ஸேவித்தவன். இவை வடகலையாக மாறினது அறுபது வருஷங்களுக்கு மேல் இராது. திருக்குடந்தை திருவயிந்திரபுரம் திருவெவ்வுளூர் முதலிய திருப்பதிகள் மாறுபட்டு 80, 85 ஆண்டுகட்கு மேலே ஆய்விட்டதென்று வடகலையார்களே சொல்லுகிறார்கள். எப்படியானாலும் கி. பி. பத்தொன்பதாவது நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் இப்படி தேவாலயங்களில் திருமண்காப்பு மாறுபட ஆரம்பித்ததென்பது அனேக ஆதாரங்களால் ஊர்ஜிதமான விஷயம்.

நமது ஸ்ரீ வைஷ்ணவஸம்பிரதாயத்தில் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் முக்கியமானவர்கள். இவ்வாழ்வாராசாரியர்களின் அவதார ஸ்தலங்களில் ஒன்று தப்பாமல் எல்லாம் தென்கலைஸ்தானங்களாகவே நாளைக்கும் விளங்கிவருகின்றன. அந்த அடைவையும் கீழே சுருக்கமாகக் காட்டுகிறேன் :—

| (ஆழ்வார்கள்) | (அவதாரஸ்தலங்கள்) |
|---|---|
| 1. பொய்கையாழ்வார் | ஸ்ரீகாஞ்சீ யதோக்தகாரிஸன்னிதி |
| 2. பூதத்தாழ்வார் | திருக்கடல்மல்லை ஸன்னிதி |
| 3. பேயாழ்வார் | மயிலைப் பெருமான் ஸன்னிதி |
| 4. திருமழிசையாழ்வார் | திருமழிசைப் பெருமான் ஸன்னிதி |

| | | |
|---|---|---|
| 5. | நம்மாழ்வார் | திருக்குருகூர் ஸன்னிதி |
| 6. | மதுரகவிகள் | திருக்கோளூர் ஸன்னிதி |
| 7. | குலசேகராழ்வார் | (அவதாரஸ்தலம் ஒரு கலையார்க்கும் அதீனமாக இல்லை) |
| 8. | பெரியாழ்வார் | ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸன்னிதி |
| 9. | தொண்டரடிப் பொடியாழ்வார் | திருமண்டங்குடி ஸன்னிதி |
| 10. | திருப்பாணாழ்வார் | உறையூர் நாச்சியார் ஸன்னிதி |
| 11. | திருமங்கையாழ்வார் | திருவாலி திருநகரி ஸன்னிதி |

ஆக ஆழ்வார்களின் அவதார ஸ்தலங்கள் யாவும் தென்கலை ஸ்தலங்களாக விளங்கிவருவதோடு இவற்றில் வேறு கலையின் ஸம்பந்தம் விவாதவிஷயமாகக்கூட இல்லை என்பது அனைவருமறிந்ததே.

இனி ஆசாரியர்களின் அவதார ஸ்தலங்களைப்பற்றித் தெரிவிக்கிறேன். சில ஆசாரியர்களின் அவதார ஸ்தலங்கள் அப்ரஸித்தங்களும் விசேஷ வைபவமில்லாதவைகளுமாதலால் அவை விடப்படுகின்றன. ஆனால் அவை வேறுகலையாருடைய அதீனமல்லவேயல்ல என்பது மாத்திரம் ஞாபகத்திலிருக்கவேணும்.

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீமந்நாதமுனிகள் | காட்டுமன்னார் ஸன்னிதி |
| 2. | ஆளவந்தார் | ஷ |
| 3. | திருக்கச்சிநம்பிகள் | பூவிருந்தவல்லி |
| 4. | எம்பெருமானார் (உடையவர்) | ஸ்ரீபெரும்பூதூர் ஸன்னிதி |
| 5. | எம்பார் | மழலைமங்கலம் ஸன்னிதி |
| 6. | ஆழ்வான் | கூரம்ஸன்னிதி |
| 7. | முதலியாண்டான் | பச்சைப் பெருமாள்கோவில் |
| 8. | பட்டர் | திருவரங்கம் பெரியகோயில் |
| 9. | நஞ்சீயர் | திருநாராயணபுரம் |
| 10. | பிள்ளைலோகாசாரியர் | திருவரங்கம் பெரியகோயில் |
| 11. | திருவாய்மொழிப்பிள்ளை | குந்தீநகரம் ஸன்னிதி |
| 12. | மணவாளமாமுனிகள் | ஆழ்வார்திருநகரி |

இவ்வாசாரியர்கள் தவிர மற்ற ஆசாரியர்களுக்கு அவரவர்களின் அவதார ஸ்தலங்களில் ஸன்னிதி வைபவங்கள் இருப்பதாகத் தெரியாமையாலே அவற்றைப்பற்றி இங்கு ப்ரஸ்தாவிக்கவில்லை.

ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் ஸன்னிதி விஷயமாகத் தெரிவிக்கவேண்டியவற்றை மேலே தெரிவிக்கின்றேன்.

எம்பெருமானார் தொடங்கி ஆசார்ய பரம்பரையானது இரண்டு வகுப்பாகப் பிரியலுற்றது. ஆழ்வான், முதலியாண்டான், எம்பார், பட்டர்—என்று நாம் இங்குத் தெரிவித்த ஆசாரியர்கள் ஒருவகுப்பைச் சேர்ந்தவர்கள். மற்றொரு வகுப்பைச்சேர்ந்த ஆசாரியர்களுக்கு அவதாரஸ்தலங்களில் அர்ச்சா விசேஷமிருப்பதாகத் தெரியவில்லை. இதர ஸன்னிதிகளிலும் அவ்வாசாரியர்களுக்கு ப்ரதிஷ்டாதிகள் இருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே அவர்களைப்பற்றி இங்கு எழுத வேண்டியதொன்றுமில்லையென நினைக்கிறேன்.

ஆசாரியவகுப்பில் முக்கியமாகவொன்று தெரிவிக்க வேண்டியதுமுண்டு; அவர்களின் அவதார ஸ்தலங்களெல்லாம் தென்கலை ஸ்தலங்களாகவே நாளைக்கும் விளங்குகின்றனவென்பது மாத்திரமேயன்றிக்கே, அவர்களின் ஸந்ததியில் தோன்றினவர்கள் என்கிற காரணத்தினால் தத்வம்ச்யர்கள் பலர்க்கு ஸ்ரீரங்கம் முதலான ஸுப்ரஸித்த திவ்யதேசங்களில் விசேஷ மரியாதைகள் ஏற்பட்டிருக்கின்றன. அந்த மரியாதைகளைத் தொன்று தொட்டு அநுபவித்து வருகின்ற ஆசார்யபுருஷர்கள் பலரும் நாளைக்கும் தென்கலையாகவே விளங்கி வருகிறார்களென்பது ப்ரத்யக்ஷம். ஸ்ரீரங்கத்தில் இன்று நேற்று ஒருவரால் ஏற்படுத்த முடியாதபடிக்கும் "ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்" என்று தேசமெல்லாம் கொண்டாடும்படிக்கும் எம்பெருமானாருடைய திவ்யாஜ்ஞாஸித்தமாக விளங்கிவருகின்ற ஆசார்யபுருஷ மரியாதைகளை நாம் எடுத்துக்காட்ட வேண்டாதே ப்ரத்யக்ஷிக்கின்ற வுலகத்திற்கு இங்கு விரிவு வேணுமோ?

ஜீயர்களைப்பற்றியும் சிறிது தெரிவிக்கிறோம். ஸன்னிதிகளின் கைங்கர்ய நிர்வாஹத்திற்கென்றே ஆங்காங்கு மடாதிபதிகளாக விளங்கி வருகின்ற யதிகள் யாவரும் தென்கலையார்களே. வானமாமலை ஜீயர், திருக்குறுங்குடி ஜீயர், ஸ்ரீரங்கநாராயண ஜீயர், எம்பெருமானார் ஜீயர், திருமலை ஜீயர், அழகியமணவாள ஜீயர், திருமாலிருஞ்சோலை ஜீயர், யதிராஜ ஜீயர் என்றிங்ஙனே வழங்கிவரும் யதிவரர்களெல்லாரும் திவ்யதேச யோகக்ஷேம பரிபாலனத்திற்காகவே நியமனம்பெற்றவர்கள். இப்படி இதரகலையில் ஸந்நிதி பரிபாலனத்திற்கென்று ஒரு யதியும்

நியமிக்கப்பட்டிருக்கவில்லை யென்பது ப்ரத்யக்ஷம். அன்னவர்கள் வாழுமிடமெல்லாம் ஆற்றங்கரையோரமாகவே யிருக்குமாதலால் ஆச்ரம தர்ம பரிபாலனார்த்தமாக அவர்கள் ஸந்ந்யஸித்து இரு முப்பொழுதேத்தும் பரமைகாந்திகளாக விளங்கிவருவது ஒருவிதமான பெருமையாகும். ப்ரக்ருதத்தில் திவ்யதேச பரிபாலனமே விஷயமாதலால் இந்தப் பெருமையை யடைந்த ஜீயர்கள் தென்கலையார்களே. "பதியே பரவித் தொழும் தொண்டர்தமக்குக் கதியே" என்றும், "கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று மண்டிஞருய்பலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே?" என்றும், "உன்கடைத்தலை யிருந்துவாழும் சோம்பரை யுகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே" என்றும் ஆழ்வார்கள் பேசின பெருமையையும். "செங்கல்பொடிக் கூறை வெண்பல் தவத்தவர் தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார்" என்று ஆண்டாளுடைய மங்களாசாஸனத்தையும் பெற்றவர்கள் இவர்களேயென்று தெரிவித்துக்கொண்டபடி. மேலே குறித்த ஆண்டாள் பாசுரத்திற்குள்ள நிர்வாஹங்களில் இதுவுமொன்று.

கோயில், ஸ்ரீவில்லிபுத்தூர், ஆழ்வார்திருநகரி, திருக்குறுங்குடி முதலிய திவ்யதேசங்களில் ஸ்ரீமந்நாதமுநிகள் காலம்தொடங்கி அரையரென்று நியமிக்கப்பட்டுள்ளாருடைய திருவம்சஸ்தர்களும் தென்கலையே.

ஸ்ரீமத் வேதாந்ததேசிகனுடைய திருவவதார ஸ்தலத்தைப் பற்றித் தெரிவிப்போம். ஸ்ரீரங்கத்தில் நாச்சியார் ஸந்நிதியெதிரில் விளங்காநின்ற ஸ்ரீதேசிகன் ஸந்நிதி நாளைக்கும் எப்படி தென்கலைத் திருமண்காப்பு திகழநின்றதோ, அப்படியே விளக்கொளி தேசிகன் ஸந்நிதியும் கி. பி. 1874-ஆம் ஞு வரை தென்கலைத் திருமண்காப்புடன் விளங்கிநின்றது.

காஞ்சீபுரத்தில் மஹாவ்யாபகராகவும் ஸ்ரீதேவராஜஸ்வாமிதேவஸ்தான தர்மகர்த்தாவாகவுமெழுந்தருளியிருந்த திருப்புட்குழியப்பாஸ்வாமி யென்று ஸுப்ரஸித்தரான உ. வே. ஸ்ரீ கிருஷ்ணதாதாசாரியர் ஸ்வாமி 1874-ஆம் வருஷத்தில் செங்கற்பட்டு ஜாயிண்டு மேஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் ஒரு கிரிமினல் தாவாவில் பிரதிவாதியாக எழுந்தருளும்படி நேரிட்டது. விளக்கொளி தேசிகன் ஸன்னிதி முன்னணியில் விளங்காநின்றிருந்த புராதன காரைக்கட்டிடமான தென்கலைத் திருமண்காப்பைச்

சில வடகலையார்கள் இடித்துவிட்டார்களென்று ஸப்கலெக்டர் மிஸ்டர் குருஸ்துரை முன்னிலையில் தொடுக்கப்பட்டிருந்த தாவாவில் ஷ திருப்புட்குழி ஸ்வாமியும் ஒரு எதிரியாக இருந்தார். அந்த தாவாவின் நம்பர் 72. அதில் ஷ திருப்புட்குழி ஸ்வாமி கொடுத்த வாக்குமூலம் அப்படியே அச்சாகி வெளிவந்திருக்கிறது. 19—9—1874ல் ஷ ஸ்வாமி கொடுத்த அந்த ஸ்டேட்மெண்டில் விளங்குகின்ற வாசகங்களாவன:

"விளக்கொளி தேசிகன் ஸன்னிதி வாசலில் தென்கலைத் திருமண்தான் இருந்தது ...............................ஆறு மாதத்திற்கு முன் நான் வெளியூர் போயிருந்த போது யாரோ வடகலையார் அதை யிடித்துவிட்டதாக கேள்விப்பட்டேன்......... அந்த தேசிகன் ஸன்னிதியிலுங்கூட தென்கலையார்களே தென்கலை மந்திரம் சொல்லியே திவ்யப்ரபந்த ஸேவைசெய்து வருகிறார்கள். அங்கு வடகலையார் வடகலை மந்திரம் சொல்லிவரக் காணோம்."..............

இதுதான் திருப்புட்குழி ஸ்வாமியின் ஸ்டேட்மெண்டு.

இதனால் வேதாந்த தேசிகனுடைய அவதார ஸ்தலமும் புராதனமாகத் தென்கலையாயிருந்ததென்பது நிஸ்ஸந்தேஹமாக விளங்கும். வடகலைத் திருமண்ப்ரவேசத்திற்கு ப்ரஸக்தியே யில்லாத திருவல்லிக்கேணி, திருவிந்தளூர், ஸ்ரீபெரும்பூதூர் முதலான விடங்களில் நாளைக்கும் ஸ்ரீதேசிகன் தென்கலைத் திருமண்காப்புடனே திகழ்கின்றமை ப்ரஸித்தமாதலாலும், அதை ஸஹியாமலே இக்காலத்தவர்கள் நூதனமாக ஆங்காங்கு மூலை முடுக்குகளில் வேறு தேசிகன் ஸன்னிதிகளைக் கட்டுவித்து ஸ்வேச்சையாக ஏதோ செய்துகொண்டு வருகிறார்கள்.

நிகமனவிஜ்ஞாபனம்;—ஏறக்குறைய பத்து திவ்யதேசங்களில் ஸன்னிதிகளுக்கு வெளி நிலங்களிலே தேசிகனுக்குத் தனியே கோவில் கட்டி வழிபாடுகள் செய்துவருகிறார்களென்பதை அறியாதாரில்லை. இது எதற்காக? என்று நாம் கேட்கின்றோம். இத்தகைய கார்யங்கள் என்றைக்கு ஆங்காங்கு ஆரம்பிக்கப்பட்டனவோ, அந்நாளுக்குச் சிறிது முற்பட்ட வருடங்களில்தான் இவர்கள் தேசிகனோடு உறவுகொண்டாடத் தொடங்கினவர்களென்பதை அறுதியிடுவதில் அருமையில்லை. ....

# தென்னாசார்யஸித்தாந்த தத்துவம்

விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு ஒரு திறவுகோல் முக்கியமாகத் தெரிந்துகொள்ளத்தக்கது. சரீராத்மபாவம் என்பது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத் திறவுகோல். 'ஸர்வேச்வரன் ஸகல சேதநா சேதநங்களையும் சரீரமாகக் கொண்டவன்' என்கிற உண்மையைச் செவ்வனே தெரிந்துகொள்ளும் வேதாந்திக்கு ஸகல உபநிஷத் வாக்யங்களும் எளிதாக அந்வயித்துவிடும், ஒன்றிலும் ஒரு அவத்யமும் தோன்ற மாட்டாது—என்பது சீரியதோர் கொள்கை இதை நன்கு தெரிந்து கொண்ட வித்வான் முன்னிலையில் எந்த மதாந்தரஸ்தனும் பங்கமடைந்தே தீர்வன் என்கிறார் ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் *யத்யேதம் யதீஸார்வபௌமகதிதம் * இத்யாதியான ச்லோகத்தினால்.

அதுபோல, ஸம்ப்ரதாயத்தில் "எந்தவிதத்திலும் எம்பெருமானுடைய பெருமையிலேயே முழுநோக்கு" என்பதே தென்னாசார்ய ஸித்தாந்தத்தின் ஸாரம் என்று தெரிந்துகொள்ளவேண்டும். இதுவே இந்த ஸம்பிரதாயத்திற்குத் திறவுகோல். இதர ஸம்ப்ரதாயங்களில் சேதநக்ருஷிக்கே ஆதிக்யம் தெரியவரும். இந்த ஸம்ப்ரதாயத்தில் அப்படியன்றிக்கே ஸர்வேச்வரனுக்கே ஸர்வாத்மநா ஆதிக்யம் தெரியவரும். இதனை முதலில் ஸுப்ரஸித்தமானவொரு அநுஷ்டானத்தினால் நன்குதெளிவிக்கின்றேன். இந்த ஸம்ப்ரதாயஸ்தர்கள் ஒருதடவை நமஸ்காரம் செய்வதென்றும் பிறர் பல தடவை நமஸ்காரம் செய்வதென்றும் காண்கின்றது. பகவானை நமஸ்கரிப்பதென்பது மிகச் சிறந்ததொரு காரியமே. இதனை ஒருதடவைக்குப் பலதடவையாகச் செய்தால் நல்லதல்லவென்று யாரேனும் நினைக்க முடியுமோ? நமஸ்கரிப்பவனுடைய கரணக்ராமமும் க்ருதார்த்தமாய், நமஸ்கரிக்கப்படுமவனான எம்பெருமானுடைய திருவுள்ளமும் ஸுப்ரஸந்நமாவதற்கு உறுப்பான காரியமன்றோ இது. அப்படியிருக்க, ஒருதடவைதான் நமஸ்காரம் செய்யவேணுமென்று ஒரு விரதமாகக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் என்ன? என்று ஒவ்வொரு விவேகிக்கும் இந்தசங்கை தோன்றவேண்டும்.

இங்குத் தென்னாசார்யர்களின் திருவுள்ளம் கேண்மின். நம்மைப் பார்த்தால் நாம் எத்தனை தடவை நமஸ்கரித்தாலும் போராது. எம்பெருமானைப் பார்த்தால் ஒரு தடவை நமஸ்கரிப்பதும் மிகையாகும்.

அப்பெருமான் கீதை முதலியவற்றில் தன்னை அல்ப ஸந்துஷ்டனாகச் சொல்லிக்கொள்ளுகிறான். * பத்ரம் புஷ்பம் பலம் தோயம் * இத்யாதிகள் அவனுடைய அமுதமொழிகளாகக் காண்கின்றன. தேவதாந்தரங்கள் மிகவும் ச்ரமப்பட்டு ஆராதிக்கப்படவேண்டியவை யென்றும், எம்பெருமான் ஆராதனைக்கு மிக எளியன் என்றும் ப்ரஸித்தம். ஆழ்வார்கள் அவனுடைய பெருமையைப் பேசுமிடத்து *தொழுது மாமலர் நீர்சுடர் தூபங்கொண்டு எழுதுமென்னுமிது மிகையாதலின்* என்றும், *தொழக் கருதுவதே துணிவதுசூதே * என்று மருளிச்செய்கிறார்கள்.

* (பூயிஷ்டாம் தே நம உக்திம் விதேம) என்கிற உபநிஷத் வாக்யத்திற்கு "தே பூயிஷ்டாம் நம உக்திம் விதேம" என்று அந்வயம் காட்டி 'நம: என்று வாயினால் சொல்லுவதும் எம்பெருமான் திருவுள்ளத்தாலே மிகக் கனத்ததாகும்' என்று நம் பூருவர்கள் † அர்த்தம் செய்தருளுகிறார்கள். பட்டர் * அஞ்ஜலி பரம் வஹந்தே * என்கிறார். நாம் ஒரு அஞ்ஜலி செய்துவிட்டாலும் அது அத்தலைக்குப் பெரிய பளுவாகத் தோன்றுமென்பதை இதனால் காட்டுகின்றார் ஆகவே ஸ்வாராதனனை எம்பெருமான் முன்னிலையில் தாம் பலகால் விழுந்தெழுந்தால் அவன் திருவுள்ளம் என்னாகுமோ? 'நம்மையும் தேவதாந்தரங்களைப்போலே நினைத்துவிட்டார்கள் போலும்' என்று அவன் திருவுள்ளம் புண்படலாகுமோ என்னவோ வென்று அஞ்சி, "ஆராதனைக் கெளியன்" என்கிற அவனுடைய பெருமைக்குக் குறைவு வாராதபடி நடந்துகொள்வோமென்றே நமஸ்காரத்தில் ஆவ்ருத்தி ஸஹிக்கப்படவில்லை.

இந்த ஸக்ருத் ப்ரணாம விஷயத்தில் சாஸ்த்ர ஸரணியில் தெரிவிக்கவேண்டிய விஷயங்கள் பலவுண்டு; அவை நமது பல நூல்களில் தெரிவிக்கப்பட்டுள்ளன. தென்னாசார்ய ஸம்ப்ரதாயம் முக்கியமாக எந்த அடிப்படையின்மீது நிற்கிறதென்பதை ஊதலிக்கவே இவ்விஷயம் இங்கு எடுத்துக்காட்டப்பட்டது. நாம் சேதநராகப்பிறந்திருக்கிறவாசிக்கு ஏதோ சைதந்ய கார்யமாக ஸ்வல்பம்செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம்; இது

† இவ்வர்த்தம் திருவாய்மொழியில் (3—3—6) * அது சுமந்தார்கட்கே * என்றவிடத்து ஈட்டிலும் ஆசார்ய ஹ்ருதயத்தில் "அகில பரத்தையும் ஸமர்பிக்க அது சுமந்து" (3—53) என்றவிடத்து வியாக்கியானத்திலும் காணத்தக்கது. ஸாக்ஷாத்ஸ்வாமி யென்கிற இதர ஸம்பிரதாய ஆசார்யரும் இவ்வர்த்தத்தையே ஆதரித்துத் தமது வியாக்கியானத்தில் எழுதிவைத்துள்ளார்.

கார்யகரமேயன்று, அவன் திருவுள்ளத்திலிரக்கமே கார்யகரம்; அது நம்முடைய ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமுமடியாக விளையக் கூடியது; ஆகிஞ்சந்யத்துக்கு எதிராக அதிகப்ரவ்ருத்திகளைக் காட்டினோமாகில் நாம் ஏதோ உபாயாநுஷ்டாநம் செய்கிறோமாகத் திருவுள்ளம் பற்றி எம்பெருமான் கைவாங்கி நிற்கநேரும்; அப்படி அவன் உதாஸீநனாகைக்கு நாம் அவகாசம் கொடுக்கலாகாது.

உபாயாநுஷ்டானங்கள் செய்யும்படி அவனே சாஸ்த்ரங்களில் விதித்திருக்கும்போது அவற்றை யதேஷ்டமாக நாம் செய்தாலென்ன? செய்யவேண்டியதுதானே என்று பிறர் நினைக்கலாம். தென்னாசார்யர்கள் அங்ஙனம் நினைப்பவர்களல்லர். * நெறிகாட்டி நீக்குதியோ? * என்று நம்மாழ்வார் அருளிச்செய்தபடி, தன்னை விட்டு நீக்குவதற்காக (நம்மை நன்கு சோதிப்பதற்காக) அவன் காட்டின வழிகளிலே நாம் கிடந்து துவளலாகாது; * காம்பறத்தலைசிரைத்து உன் கடைத்தலையிருந்து வாழுஞ் சோம்பரை யுகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே * என்று தொண்டரடிப்பொடி யாழ்வாரருளிச் செய்தபடி திண்ணிதான அத்யவஸாயங் கொண்டிருப்பதே உற்றது—என்கிற உறுதி தென்னாசார்யர்களின் கருவிலேயே ஊறிக்கிடப்பதாகும்.

நம்பிள்ளையினுடைய திவ்ய ஸூக்திகளிலே இரண்டொன்றை இங்கெடுத்துக்காட்டி இவ்விஷயத்தை நெஞ்சில் பதியவைக்கின்றேன். திருவாய்மொழியில் * பத்துடையடியவர்க் கெளியவன் பிறர்களுக்கு அரிய வித்தகன் * என்றவிடத்து ஈட்டில்—

"நம்முடையவர்கள் எம்பெருமானையே உபாயமாகப் பற்றுநிற்க, அல்லாதார் அசேதநக்ரியாகலாபங்களைப் பற்றுகிறுப்போலேயிறே துர்யோதனன் நிலை" என்றுள்ளது.

இதனால் நம்முடையவர்கள்படியும் அல்லாதார்படியும் அறியத்தக்கது. மேலே அந்தப் பதிகத்திற்கு அடுத்த பதிகத்திலே (1—4—7) * என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு * என்றவிடத்து ஈட்டில்—

"தேவரீர் க்ருபைக்குத் தண்ணீர்த் துரும்பாக ஏதேனும் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் பண்ணிற்றுண்டோவென்று நம்பிள்ளை யருளிச் செய்யும்படி"—என்றுள்ளது.

இந்த ஸ்ரீஸூக்தியை நன்கு விமர்சிக்கவேணும். எம்பெருமானிடத்தில் தூதுவிடுகிற ப்ரகரணம் இது. என்னதப்பு செய்துவிட்டதாக உபேக்ஷித்திருக்கிறீரென்று கேளுங்கோளென்று இங்கே மூலமுள்ளது. "நாங்கள் ஏதேனும் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் செய்துவிட்டதாக எண்ணி உபேக்ஷித்திருக்கிறீராவென்று கேளுங்கோள்" என்பதாக நம்பிள்ளை விவரணம் செய்தருளினர். இதனால் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் செய்வது எம்பெருமானுடைய க்ருபைக்கு ப்ரதிபந்தகம் என்று ஸ்பஷ்டமாக விளங்குகின்றது. இப்படி யருளிச்செய்திருக்கிற நம்பிள்ளை பகவத் ஸந்நிதியில் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் செய்திருக்கமாட்டாரா? செய்திலர் என்றால் இதை யாரேனும் நம்பமுடியுமா? அது சாஸ்த்ரார்த்தந்தானாகுமா? எதற்காக இங்ஙனே நம்பிள்ளை யருளிச்செய்தார்? என்று விவேகிகள் விமர்சிக்கவேண்டுமன்றோ? விமர்சித்தால், அதிகப்ரவ்ருத்தி அவத்யமென்றதாகத் தேறும்.

சிறிய திருமடலில் "செங்குறிஞ்சித் தாரார் நறுமாலைச் சாத்தற்குத் தான் பின்னும் நேராதனவொன்று நேர்ந்தாள்" என்றுள்ளது. இங்கு மூலத்தின் மேல் அர்த்தமென்ன வென்றால், செங்குறிஞ்சி மாலையை அணிகின்ற 'சாஸ்தா' என்கிற தேவதாந்தரத்தைநோக்கி ஓர் அஞ்சலியும் பண்ணிவிட்டாள் என்றதாம். 'ஒன்று நேர்ந்தாள்' என்ற மூலத்திற்கு ஓர் அஞ்சலி செய்தாளென்று அர்த்தம். இங்கே "தான் பின்னும் நேராதன வொன்று நேர்ந்தாள்" என்ற சொற்சுவையை நோக்கிப் பெரியவாச்சான்பிள்ளை என்ன வ்யாக்கியானம் செய்தருளியிருக்கிறாரென்றால்;

"(தான்) வகுந்த விஷயத்திலே ஓர் அஞ்சலி பண்ணினால் அது ஸாதனத்தில் அந்வயிக்கில் செய்வதென்?
என்றிருக்கக்கடவ தான்"
என்று அருளிச்செய்துள்ளார்.

இந்த ஸ்ரீஸூக்தியோடுஞ் சேர்த்து முன்னேகாட்டிய நம்பிள்ளை ஸ்ரீஸூக்திக்கு அர்த்தம் செய்யுமளவில் தென்னாசார்யர்களின் திருவுள்ளம் புலப்படும். உபாயகோடியில் எள்ளளவும் அந்வயியாமல் ஸ்வரூபத்தளவிலே நிற்கும்படி சில செய்வதே உற்றது; எதையேனும் அதிகப்படியாகச்செய்தால் அது உபாயகோடியிலே அந்வயித்து ஆகிஞ்சந்யத்தைக் குலைத்து எம்பெருமானுடைய திருவருளுக்கு இடையூறாக

நிற்குங்கொல்! என்கிற அதிசங்கை இவர்களுக்கு உள்ளதென்னுமிடம் விளங்காநின்றது.

இதன்மேல் பிறர் பலவகையான ஆக்ஷேபங்களைக்கொண்டு புகுத்தக்கூடும். அவற்றுக்கு ஸமாதானங்களும் பலவுள்ளன. ஆனால் அந்த ப்ரபஞ்சனங்களுக்கு இடமளிக்கும் நூல் இதுவன்று. ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளுக்குக் காப்பாக ஆளவந்தார் உடையவர் ஆழ்வான் பட்டர் முதலானோர் ஒருமிடறாக அருளிச்செய்து போந்த அர்த்த விசேஷம் அறிவிக்கப்பட்டதத்தனை.

எந்த விஷயத்திலும் சாஸ்த்ரங்கள் ஒரு வழியையே காட்டமாட்டா: பல வழிகளையும் காட்டி நிற்கும்; ஒவ்வொரு அதிகாரிகள் ஒவ்வொரு வழியைப் பற்றி நிற்பது ஸஹஜம். ... ... •

பகவத் கீதையில் (10-10) "தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம், ததாமி புத்தியோகம் தம் யேந மாம் உபயாந்தி தே." என்ற சுலோகத்தில் சங்கரபாஷ்யத்தில் "ப்ரீதிபூர்வகம் பஜதாம்" என்று அந்வயம் காட்டப்பட்டது. ஸ்வாமிபாஷ்யத்தில் (ப்ரீதிபூர்வகம் ததாமி) என்று மேலோடே அந்வயம் காட்டப்பட்டது. சங்கராசாரியர் காட்டின யோஜனையில் ஏதாவது தவறு நினைக்கமுடியுமோ? என்னில் முடியாது. ஸ்வாமி எதற்காக வேறு யோஜனை காட்டினாரென்று விமர்சிக்கவேண்டாமா? தேசிகன் விமர்சித்தார், சுவை பெருக எழுதினார். என்ன எழுதினார்? "ப்ரீதி பூர்வக மித்யஸ்ய பஜநாந்வயே ப்ரயோஜநம் மந்தம்" என்று சங்கராசார்ய யோஜனையில் குறைகாட்டிவிட்டு "ததாமீத்யநேந அந்வயே மஹத்ப்ரயோஜனம் அஸ்தி" என்றார்; அந்த மஹத்தான ப்ரயோஜனம் இன்னதென்பதை "பரமோதாரத்வாதி பகவத்குண கணப்ரகாசநேந" என்கிற ஸ்ரீஸூக்தியால் விளக்கியருளினார். இங்கு விஷயம் புரிந்ததா? எம்பெருமானை நாம் நிரதிசய கல்யாண குணநிதியாகக் கொள்ளுமவர்கள் அவனுடைய திருக்குணத்திற்கு ஏற்றம் விளங்கும் வகையை நாம் ஆதரிக்கக் கடமைபட்டிருக்கிறோம். இதுதான் தென்னாசார்ய ஸித்தாந்த ஸாரமென்று இவ்வளவோடு நிற்கிறோம்.

ஸ்ரீ:

# உபஸம்ஹார விஜ்ஞாபனம்

---

உபயஸம்ப்ரதாயஸ்தர்களும் ஆதரித்துப்போருகிற அர்த்தங்களில் பலபலவாசிகள் இருந்தாலும், முக்கியமாகப் பிள்ளை லோகாசாரியரும் மணவாளமாமுனிகளும் முன்னோர் மொழிந்த முறைதப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து பேசியருளின பொருள்களில் தலையானது எது வென்றால், *காம்பறத் தலைசிரைத்து* என்று திருமாலையிலருளிச்செய்த படி சேதநன் தலையில் யாதொன்று மிருக்கத்தகாதென்பதே; உபாயாநுஷ்டானம் என்று வாய்திறப்பதுங்கூட ஸ்வரூபவிருத்தம் என்பதே. இதை ஸ்ரீமந் நிகமாந்ததேசிகன் ஸர்வாத்மநா தழுவியே தாம் அர்த்த நிர்ணயங்கள் செய்தருளியிருக்கிறாரென்பதைப் பரக்க நிரூபித்தாயிற்று. தேசிக ஸம்பந்தத்தை இடையில் ஆவாஹனம் செய்துகொண்டுள்ள நவீனர்கள் நிச்சலும் சிந்தைசெய்யவேண்டிய ஸ்ரீஸூக்திகள் இவை; தேசிகனருளிச்செய்ததும் ஸாரசாஸ்த்ரமென்று இவர்கள் கொண்டாடுவதுமான ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்தில் *மாமேகம் சரணம் வ்ரஜ* என்றவிடத்து ஏகபதார்த்த விவரணம் செய்தருளுகையில் அருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகளிவை—

*கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்* என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ராமாணிகமே யாகிலும் இது பராதீனமுமாய் அல்ப விஷயமுமாய் ப்ரதிஹதி யோக்யமுமா யிருக்குமாகையால் இவன் தான் உபாயாநுஷ்டாநம் பண்ணிற்றும் *வரத! தவ கலு ப்ரஸாதாத் ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்* என்று சொல்லுகிற படியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு அவன் காட்டின வுபாயத்தை அவன் துணைசெய்ய அநுஷ்டித்து அவனால் கொடுக்கப் படுகிற பலத்துக்கு சாதகம்போலே அண்ணாந்திருக்கிறவிவனை ஸ்வாதீந ஸர்வவிஷய அப்ரதிஹதகர்த்ருத்வ முடையவனோடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாயமாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று—என்று ஏகசப்தத்தாலே சொல்லிற்றாயிற்று" (மறுபடியும் பத்துவரி கடந்து மேலும் ஸாதிக்கிறார்)—"*என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்

னருளே யென்றும் * இசைவித் தென்னையுன் தாளிணைக் கீழிருத்து மம்மானே யென்றுஞ் சொல்லுகிறபடியே உபாய பூதனான அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜமாத்ரத்தை அவனோடொக்க உபாய மாக வெண்ணுகை உசிதமன்றென்று ஏக சப்தத்துக்கு தாத்பர்யம்''

பேர்க்கவும் பேராதவையான இந்த பங்க்திகளின் அர்த்தமறிவதற்கு ஏதேனும் வியாக்கியானம் வேணுமோ? ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகியசிங்கர் போல்வார் வியாக்கியானமும் செய்தருளியுள்ளார்கள். * அபிநிவேச வசீக்ருத சேதஸாம் பஹுவிதாபி ஸம்பவதி ப்ரமः * என்று விமதர்கள் திறத்தில் ஆளவந்தார் அருளிச்செய்தார். ப்ரக்ருதவிஷயத்தில் நவீனர்களுக்கு ப்ரமமிருப்பதாகச் சொல்லப்போகாது. வீணான பிடிவாதமத்தனை. அத்தை விலக்கி ஆர்ஜவத்துடன் உபயாசார்ய ஸூக்திகளையெல்லாம் நோக்குமவர்கள் பிள்ளை லோகாசாரியரையும் மணவாளமாமுனிகளையும் தேசிகனுக்கும் மேலாகப் போற்றக் கடமைப்பட்டவர்கள். இதி ஸர்வம் ஸ மஞ்ஜஸம்.

---



## அடியேன் செய்யும் விண்ணப்பம்

பிள்ளை லோகாசாரியர், வேதாந்த தேசிகன், மணவாள மாமுனிகள் ஆகிய மூவரும் அருளிச்செய்த திவ்ய க்ரந்தங்களை யெல்லாம் பலகால் பரிசீலனை செய்து அடியேன் நிருபிக்கும் அர்த்த விசேஷங்கள் இப் புத்தகத்தில் ஸாரமாகவும் சுருக்கமாகவும் பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றை எனது வடமொழி நூல்களிலும் வடுகு மொழி நூல்களிலும் விரிவாக விளக்கியுள்ளேன். ப்ராமாணிகர்களான ப்ராஜ்ஞர்கள் கண்டு உகந்து வருகிறார்கள். ... *

— தழைநல்லவின்பந்தலைப்பெய் தெங்குந்தழைக்கவே. —

K. P. சந்தரகாசன், கரோடி.

K. P. சந்தரகாசன், கரோடி.